

# திருக்கோயில்

"என்கடன் பணி செய்து கிடப்பதே"



சேக்கிழார் சுவாமிகள்

மாலை 5] சோபகிருது வைகாசி - ஜூன் 1963 [மணி 9



சென்னை அரசாங்க அறநிலையப்



திருநாராயணபுரம் ஸ்ரீ வேதநாராயணப் பெருமாள் கோயிலில், அறநிலைய ஆணையாளர் **திரு. M. S. சாரங்கபாணி முதலியார், B.A., B.L.** அவர்கள், அங்குக் கட்டப்பெறும் கல்யாண மண்டபத்திற்குக் கால்கோள் நிகழ்த்துதல்.

---

## பொருள் அடக்கம்



---


**ஆண்டுச் சந்தா ரூ. 10/-**  **தனி இதழ் விலை ரூ. ஒன்று.**


## சந்தா தாரர்களுக்கு வேண்டுகோள்

சந்தாப்பணம் நிலுவையுள்ள சந்தாதாரர்கள், தம் நிலுவைச் சந்தாப் பணத்தையும், 1963-64 புதிய ஆண்டுக்கான சந்தாப் பணத்தையும், விரைவில் அவ்வவ் வட்டார அறநிலைய உதவி ஆணையாளர் அலுவலகங்களில் செலுத்திவிடுமாறு, நினைவூட்டிக் கேட்டுக் கொள்ளப் பெறுகின்றார்கள்.

—ஆசிரியர்.




மாலை 5]  சோபகிருது வைகாசி-ஜூன் 1963  [மணி 9

# சேக்கிழாரும் முருகனும்

தெய்வப் புலவர் ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள், தம் இளமைப் பருவத்தில் குன்றத்தூர்க் குன்றிற் கோயில் கொண்டுள்ள முருகனை வழிபட்டு மகிழ்ந்ததன் விளைவாகவே, தாம் பாடத் தலைப்பட்ட திருத்தொண்டர் புராணத்திற்கு முருகனோடு நேரே பெரிதும் தொடர்பு இல்லையாயினும், ஆங்காங்கே ஏற்ற பெற்றி உரிய தொடர்புகளை வருவித்துக் கொண்டு, உருகும் உணர்வோடு முருகப் பெருமானைப் பற்றிக் குறிப்பிட்டுக்கொண்டு செல்லுகின்றார் எனலாம். அங்ஙனம் முருகனைப் பற்றிப் பெரிய புராணத்துள் வரும் குறிப்புக்கள், பின் வருவன :

### முன்னே வந்து எதிர் தோன்றும் முருகன்:

1. முருகன் அழகுக் கடவுள். முருகு என்னும் சொல்லுக்கு அழகு என்பது பொருள். முருகன் அழகுத் தெய்வம் என்பதனை,

ஆயிர கோடி காமர்
அழகெலாம் திரண்டொன் ருக



சேக்கிழார் கோயில், குன்றத்தூர்.

மேயின எனினும், செவ்வேள்
விமலமாம் சரணம் தன்னில்
தூயநல் எழிலுக்கு ஆற்றுது
என்றிடின், அனைய தொல்லோன்
மாயிரு வடிவிற் கெல்லாம்
உவமையார் வருக்க வல்லார் ?

எனக் கச்சியப்ப சிவாசாரியர் தமது கந்தபுராணத்துட் சூரபதுமன் கூற்றுகவைத்து விளக்கிக் கூறியிருத்தல் கொண்டு உணரலாம். எனவே, முருகனை நினைவு கூர்வோர் எவரும், முதற்கண் அவன் அழகுத் தெய்வம் ஆதலையே நினைவு கூர்ந்து இன்புறுவர். ஆதலின் சேக்கிழார் சுவாமிகளும், முருகப் பெருமான் அழகுக்கு முதன்மையுடைய னுதலையே சிறந்தெடுத்து முதற்கண் மொழிந்தருளுகின்ருர்.

சுந்தரமூர்த்தி சுவாமிகள் திருவாரூர்ப் பூங்கோயிலில் புற்றிடங் கொண்ட பெருமானைப் போற்றி வழிபடச் செல்லுகின்ருர். அங்கு அவர் நற்பெரும் பான்மை கூட்ட நகைபொதிந் திலங்கு செவ்வாய்ப் பரவை நாச்சியாரைக் காண்கின்ருர். பண்டை விதி கடைக்கூட்டப் பரவையாரும் அவரைக் காணப் பெற்ருர். கண்ணெடு கண்ணிணை கவ்வி, ஒன்றை ஒன்று உண்ணவும் நிலைபெருது உணர்வும் ஒன்றியது. அந்நிலையில் அவ்விருவரும் கொண்ட காதலுணர்வின் மனஎழுச்சி நிலையினைச் சேக்கிழார் சுவாமிகள், பின் வரும் சிறந்த இனிய செய்யுட்களால் விளக்குகின்ருர். பரவையாரைக் கண்ட சுந்தரர்,

“கற்பகத்தின் பூங்கொம்போ ?
காமன்றன் பெருவாழ்வோ ?
பொற்புடைய புண்ணியத்தின்
புண்ணியமோ? புயல் சுமந்து
விற்குவளை பவளமலர் மதிபூத்த
விரைக்கொடியோ ?
அற்புதமோ ? சிவன் அருளோ ?
அறியேனென் றதிசயித்தார்!”

சுந்தரரைக் கண்ட பரவை நாச்சியாரோ,

“முன்னேவந் தெதிர்தோன்றும்
முருகனே ? பெருகொளியால்
தன்னேரில் மாரனே ? தார்மார்பின்
விஞ்சையனே ?
மின்னேர்செஞ் சடையண்ணல்
மெய்யருள் பெற்றுடையவனே ?
என்னே ! என் மனம்திரித்த
இவன்யாரோ ? எனநினைந்தார்”

சுந்தரரும் பரவையாரும் தமது சிந்தை ஒன்றிக் காதல் கொண்ட செய்தியினை விளக்கும் இச் சிறந்த பகுதியில், “முன்னே வந்து எதிர் தோன்றும் முருகனே ?” என்றதனுல், முருகன் அழகிற் சிறந்த தெய்வமாதலைச் சேக்கிழார் சுவாமிகள் குறிப்பிட்டிருத்தல் காண்க.

## முருகலர் அலங்கற் செவ்வேல் முருகவேள் :

(2) முருகன் தன்னை அன்பினுல் வழிபடுவார்க்கு, அவர்கள் வேண்டும் நலங்கள் பலவும் வேண்டியவாறே விரைந்து அளிக்கும் இயல்புடையவன். இவ்வுண்மையையும் சேக்கிழார் சுவாமிகள் சிறந்தெடுத்துச் செவ்விதிற் புலப்படுத்துகின்ருர்.

பொத்தப்பி நாட்டில் உடுப்பூரில் வேடர் தலைவனுக விளங்கிய நாகனும், அவன் மனைவி தத்தையும், “இனி இவர்களுக்கு மகப்பேறு வாய்த்தல் அரிது” என்று எவரும் கூறத் தக்க நிலைமையில் முதுமை அடைந்து விட்டனர். எனினும், அவர்கள் பிள்ளைப்பேறு எய்துதலில் எல்லையில்லாத விருப்பம் கொண்டிருந்தனர். அவ்விருப்பம் நிறைவேறுதற் பொருட்டு, அவர்கள் முருகனையே பரவுதல் செய்து நாளும் பராய்க்கடன் நெறியில் நின்றனர். முருகனைப் பிரார்த்தித்துக் கோயிலுக்குச் சேவலும் மயிலும் விடுத்தனர். முருகனைத் துதித்துக் குன்றக் குரவைகள் நிகழ்த்தினர். பெருவிழாக்கள் எடுத்தனர். முருகன் அருளால் அவர்களுக்கு ஒரு மைந்தன் தோன்றினுன். கண்ணப்பர் என்று அம் மைந்தனையே இன்று உலகம் புகழ்ந்து போற்றுகின்றது.

“பொருவரும் சிறப்பின் மிக்கார்
இவர்க்கினிப் புதல்வற் பேறே
அரியதென் றெவரும் கூற
அதற்படு காத லாலே

முருகலர் அலங்கற் செவ்வேல்
முருகவேள் முன்றிற் சென்று
பரவுதல் செய்து நாளும்
பராய்க்கடன் நெறியில் நிற்பார்."

"மயிலுடைக் கொற்ற ஊர்தி
வரையுரங் கிழித்த திண்மை
அயிலுடைத் தடக்கை வென்றி
அண்ணலார் அருளி னலே..."

எனவரும் பெரிய புராணத் திருப்பாடல்கள் ஈண்டு நினைவு கூர்தற் குரியன. முருகன் குறிஞ்சி நிலத்தெய்வ மாதலும், குறிஞ்சி நில மக்கள் அப்பெருமானை வழிபடும் முறைகளும் பிறவும் ஈண்டுச் சேக்கிழாராற் குறிப்பிடப் பெற்றிருத்தல் காணலாம்.

**குன்றம் எறிந்த வேலவன் :**

(3) முருகனின் வீரச் செயல்கள் பல வற்றுள், தாரகாசுரன் கிரவுஞ்சம் என்னும் குன்றமாக நின்று வீரவாகுதேவர் முதலிய வர்களை மயக்கியபோது, அக்குன்றைப் பிளந் தெறிந்து கொன்ற செயலும் ஒன்றாகும்.

"குன்றம் கொன்ற குன்றுக் கொற்றத்து
விண்பொரு நெடுவரைக் குறிஞ்சிக் கிழவ"

எனத் திருமுருகாற்றுப்படை, இவ்வியத்தகு வீரச்செயலைப் புகழ்ந்து கூறுகின்றது. சூர பதுமன் சிங்கமுகன் தாரகாசுரன் என்னும் மூவரும், முறையே ஆணவம் கன்மம் மாயை என்னும் மும்மலங்களாகக் கூறப்படுவர். கிரவுஞ்சம் என்னும் குன்றினை எறிந்து தாரகன் என்னும் அசுரனைக் கொன்ற முருகனின் செயல், அவன் மாயாமலத்தைக் கடந்தவன் என்றும், அவனை வழிபடும் அன்பர்கள் மாயையிற் சிக்கி வருந்த முருமற் காக்கப் பெறுவர் என்றும் உணர்த்தி நிற்கும்.

திருக்குறிப்புத் தொண்டர் வரலாற்றில், அந்நாயனர் தோன்றியருளிய காஞ்சிபுரத்தின் சிறப்புக்களை விரிவாக விளக்கும் சேக்கிழார், அந்நகரமானது விநாயகர் வைரவர் முருகன் ஆகிய கடவுளர் மூவராலும் காவல் காக்கப் பெறும் மாட்சிமையுடையது என்கின்றார்.

"அஞ்சு வன்கரத் தாறிழி மதத்தோர்
ஆனை நிற்கவும், அரையிருட் டிரியும்
மஞ்சுநிற் பது போலும்மா மேனி
மலர்ப்ப தங்களில் வண்சிலம் பொலிப்ப
நஞ்சுபில் கெயிற் றரவவெற் றரையின்
நாம மூன்றிலைப் படையுடைப் பிள்ளை
எஞ்சல் இன்றிமுன் திரியவும், குன்றம்
எறிந்த வேலவன் காக்கவும் இசையும்"

இச் செய்யுட்கண் "குன்றம் எறிந்த வேலவன்" என முருகன் குன்றம் எறிந்த குன்றுக் கொற்றத்தினைச் சேக்கிழார் சுட்டியிருத்தல் காண்க. முன்பும் கண்ணப்பர் வரலாற்றில் "வரையுரங் கிழித்த திண்மை அயிலுடைத் தடக்கை வென்றி அண்ணலார்" என அருளிச் செய்திருத்தல் அறியற் பாலது.

**சேய்ஞலூர்ச் சிறப்பு :**

(4) முருகனுக்குச் சேய், சேயோன், சேந்தன் எனப் பலபெயர்கள் உண்டு.

(1) அலந்தோர்க் களிக்கும் பொலம்பூண் சேஎய்

(2) சேயோன் மேய மைவரை யுலகம்

(3) சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனை

எனவரும் திருமொழிகள் இவ்வுண்மையினை வலியுறுத்தும். இதனை ஆசிரியர் சேக்கிழார் சுவாமிகள் ஓரிடத்தில் நமக்குத் தெளிவுறப் புலப்படுத்துகின்றார்.

சோழ நாட்டில் மண்ணியாற்றின் தென் கரையில் ஓர் ஊர்! அவ்வூர் பண்ணின் பயனும் நல்லிசையும், பாவின் பயனும் இன்சுவையும், கண்ணின் பயனும் பெருகொளியும், கருத்தின் பயனும் எழுத்தஞ்சும், விண்ணின் பயனும் பொழி மழையும், வேதப் பயனும் சைவமும் போல், மண்ணின் பயனும் மாண்புடையதாய், வளத்தின் பெருமை வரம்பற்றது.

அங்கு அந்தணர்கள் மிகுதியாக வாழ்ந்து வந்தனர். அவர்கள் செம்மை வெண்ணீற்று ஒருமையினர்; இரண்டு பிறப்பின் சிறப்பினர்; மும்மைத் தழல் ஓம்பிய நெறியார்; நான்கு வேதம் முறை பயின்றார்; தம்மை ஐந்து புலனும் பின்செல்லும் தகையார்; அறுதொழிலின் மெய்ம்மை ஒழுக்கம் அமைந்தார். அவர்கள் ஏழுலகும் போற்ற விளங்குபவர்கள்.

இவ்வூர்தான் சண்டேசுர நாயனர் தோன்றியருளிய சிறந்த தலம். இதற்குச் சேய்ஞலூர்

என்பது பெயர். அப்பெயர் அமைந்த காரணத்தினைச் சேக்கிழார் சுவாமிகள் பின் வருமாறு விளக்குகின்றார் :

"பூந்தண் பொன்னி எந்நாளும்
பொய்யா தளிக்கும் புனல்நாட்டு
வாய்ந்த மண்ணித் தென்கரையில்
மன்ன, முன்னாள் வரைகிழிய
ஏந்தும் அயில்வேல் நிலைகாட்டி
இமையோர் இகல்வெம் பகைகடக்கும்
சேந்தன் அளித்த திருமறையோர்
மூதூர் செல்வச் சேய்ஞலூர் !"

முருகப்பெருமான் தாரகாசுரனை வென்று கொன்ற பிறகு, திருக்கயிலையினின்று தென் திசை நோக்கிப் போந்தார். கேதாரம் காசி திருப்பருப்பதம் வேங்கடகிரி திருக்காளத்தி திருவாலங்காடு காஞ்சிபுரம் திருவண்ணாமலை திருவெண்ணெய் நல்லூர் திருமுதுகுன்றம் தில்லை முதலிய தலங்களைக் கண்டு மகிழ்ந்து கொண்டு, மண்ணியாற்றின் தென்கரையை அடைந்தார். அங்கு அவர் சிவபெருமானைப் பூசித்து வழிபட்டார். அதுபோது சிவபிரான் முருகனுக்குச் சூரபதுமனை வெல்லுதற்குரிய வேற்படையினை அளித்தான். சேய் ஆகிய முருகப் பெருமான் நல்ல ஊர் என்று கூறி, இதன்கண் உறைதற்கு விரும்பியதனால், 'இதற்குச் சேய்ஞலூர் (சேய்+நல்+ஊர்) எனப் பெயர் வழங்குவதாயிற்று. சேக்கிழார் கூறும் இவ் விளக்கத்தினைக் கந்தபுராணம் வழிநடைப் படலம் தழுவி மொழிகின்றது. சேய்ஞலூர் என்பதனையே கந்தபுராணம் குமாரபுரி எனக் குறிப்பிடுகின்றது. 'குமாரபுரிப் படலம்' என்பதொன்று கந்த புராணத்தில் அமைந்துள்ளது.

### முருக பக்தியும் அரச பக்தியும் :

இங்ஙனம் 'சேய்ஞலூர்' பற்றி விளக்கம் கூறித் தெருட்டித் தம் முருக பக்தியைப் புலப்படுத்திய சேக்கிழார் சுவாமிகள், தம் அரச பக்தியையும் சண்டேசுரர் வரலாற்றிற் புலப்படுத்தி யருள்கின்றார். வரலாற்று ஆராய்ச்சியாளர்கள் பொன்னினும் மணியினும் பொதிந்து போற்றி மகிழத் தகும் பின்வரும் திருப்பாடலையும், ஓராற்றால் இயைபுபற்றி, ஈண்டுப் பொறித்தல் சிறப்புடையதாகும்.

"சென்னி அபயன் குலோத்துங்கச்
சோழன் தில்லைத் திருவெல்லை
பொன்னின் மயமாக் கியவளவர்
போரேறு ! என்றும் புவிகாக்கும்
மன்னர் பெருமான் அநபாயன்
வருந்தொல் மரபின் முடிசூட்டும்
தன்மை நிலவு பதிஐந்தின்
ஒன்றாய் நீடும் தகைத்து அவ்வூர்!"

சேக்கிழார் தலைமை அமைச்சராகப் பணி புரிந்த பொழுது, சோழப் பேரரசனாகத் திகழ்ந்தவன் குலோத்துங்கச் சோழன் என்பதும், அவன் தில்லையைப் பொன்மயமாகச் செய்தான் என்பதும், அவனுக்கு அபயன் அநபாயன் என்று பல சிறப்புப் பெயர்கள் உண்டு என்பதும் பிறவும், இச் செய்யுளால் தெளியப்படும். பெரும்பாலான அறிஞர்கள் இப்பாடலின் துணை கொண்டே, சேக்கிழார் இரண்டாம் குலோத்துங்க சோழன் (கி. பி. 1123—1148) காலத்தவர் என்னும் ஆராய்ச்சி முடிபு கொள்கின்றனர்.

### தாமரைமிசைத் தனிமுதற் குழவி :

5. முருகனுக்குச் 'சரவணபவன்' என்று ஒரு திருப் பெயர் உண்டு. சிவபிரானின் திருமுகங்களினின்று வெளிப்பட்ட ஆறு தீப்பொறிகளையும், வாயுதேவனும் அக்கினிதேவனும் சுமந்து சென்று கங்கையின்கட் சேர்த்தனர். கங்கையானவள் அவற்றைச் சரவணப் பொய்கையிற் சேர்த்தனள். சரவணப் பொய்கையில் முருகன் தாமலரில் மலரில் வீற்றிருந்தான். இதனைப் பின்வரும் கந்த புராணப் பாடல் உணர்த்தும் :

"மறைகளின் முடிவால் வாக்கால்
மனத்தினால் அளக்கொ ணாமல்
நிறைவுடன் யாண்டும் ஆகி
நின்றிடும் நிமல மூர்த்தி
அறுமுக உருவாய்த் தோன்றி
அருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதில்
வீற்றிருந் தருளி னானே"

சரவணப் பொய்கையில் தாமரை மலரின்மேல் முருகன் வீற்றிருந்தருளிய தன்மை, அண்டப்

புத்தேள் ஆகிய விராட்புருடனின் மனம் எனும் தாமரை மலரிற் சிவபிரான் அமர்ந்திருப்பதனை ஒத்திருந்தது

"பெருந்தரை நடுவண் ஆகிப்
பிறங்கிய சரவ ணத்தில்
இருந்தனிக் கமலம் ஒன்றில்
குமரவேள் இருந்த பான்மை
திருந்துநல் அண்டப் புத்தேள்
சிந்தையாம் புண்ட ரீக
புரந்தனில் விரும்பித் தாதை
வைகிய இயற்கை போலும் "

அன்றியும், முருகன் மேலே இனி பிரமனைப் பிரணவப் பொருள் வினவி, விடை கூறாமையால் அவனைத் தலையிற் குட்டிச் சினந்து சிறையில் இடுவித்து, அவனது சிருட்டித் தொழிலைத் தானே செய்யத் தொடங்கி, அப் பிரமனைப் போலத் தாமரை மலரின் மேல் ஏறி அமர இருக்கும் தன்மையைப் போன்றிருந்தது.

"சலங்கிளர் தரங்கத் தெய்வச்
சரவணக் கமலப் போதில்
நலங்கிளர் குமரன் சேர்தல்,
நான்முகற் சிறைமேல் வீட்டிப்
புலங்கிளர் உயிர்கள் நல்கப்
பொருந்துநற் பகலின் முன்னர்
இலங்கெழிற் பதும பீடத்
தேறிய இயற்கை போலும்.!"

சீர்காழியில் சிவபாத இருதயரும் பகவதியாரும் செய்த தவத்தின் சிறப்பினால் திருஞான சம்பந்தர் திருவவதாரம் செய்தருள்கின்றார்! அவரை அவர்தம் பெற்றோர்கள் தொட்டிலில் இடுகின்றனர். சரவணப் பொய்கையில் தாமரை மலரின்மேல் வீற்றிருக்கும் முருகன் ஆகிய குழந்தையைப் போல, நல்ல தூய மணிகளை நிரலே பதித்து அழகுறச் செய்த ஒரு தொட்டிலின்கண் திருஞான சம்பந்தர் ஆகிய குழந்தையை அவர்கள் அமர்வித்தார்கள் எனப் பாடுகின்றார் சேக்கிழார்!

"நாமகர ணத்தழகு நாள்பெற நிறுத்திச்
சேமஉத யப்பரிதி யில்திகழ் பிரானைத்
தாமரை மிசைத்தனி முதற்குழவி என்னத்
தூமணி நிரைத்தணிசெய் தொட்டில் அமர்
வித்தார் "

## சோமாஸ்கந்த மூர்த்தம் :

(6) சோமாஸ் கந்த மூர்த்தம் என்பது சிவபிரானின் திருக்கோலங்களுள் ஒன்று. சிவபிரான் உமையம்மையோடும் கந்தப் பெருமானுடனும் எழுந்தருளி விளங்குவதே, சோமாஸ்கந்த மூர்த்தம் (சஹ + உமா + ஸ்கந்தம்) என்னும் திருக்கோலம் ஆகும். இறைவன் சத்து + சித்து + ஆனந்தம் என்னும் மூன்றின் வடிவாக விளங்குகின்றான் என ஞான நூல்கள் கூறும். இறைவன் சத்து, அம்மை சித்து, முருகன் ஆனந்தம் எனத் திகழ்வதே சோமாஸ்கந்த மூர்த்தம். இரவுக்கும் பகலுக்கும் நடுவே வரும் மாலைக் காலத்தின் இயல்பினைக் கூறப் புகும் கச்சியப்ப சிவாசாரியார், அம்மைக்கும் அப்பனுக்கும் நடுவே முருகன் அமர்ந்திருக்கும் சோமாஸ் கந்த மூர்த்தத்தினை உவமை கூறுகின்றார்.

"ஏல வார்குழல் இறைவிக்கும்
எம்பிரான் தனக்கும்
பாலன் ஆகிய குமரவேள்
நடுவுறும் பான்மை,
ஞால மேலுறும் இரவொடு
பகலுக்கும் நடுவாய்
மாலை யானதொன் றழிவின்றி
வைகுமாறு ஒக்கும் "

சோமாஸ்கந்த மூர்த்தத்தை வழிபடுவோர், கணவனும் மனைவியுமாய் இல்லறத்தில் இன்ப அன்புற்று, நல்ல மகப்பேறும் சந்தானத் தொடர்பும் பெறுவார்கள் என நூல்கள் நுவல்கின்றன.

"தொல்லை யுலகம் போற்றெடுக்கும்
சோமாஸ் கந்தர் தமைத்தாழின்
நல்ல மகவும் சந்தானத்
தொடர்பும் இனிது நல்குவார்."

இது பற்றியே எல்லாத் திருக்கோயில்களிலும் சோமாஸ் கந்த மூர்த்தம் சிறப்புற அமைத்து வழிபடப் பெறுகின்றது.

இத்தகைய சிறப்பு மிகுந்த சோமாஸ்கந்த மூர்த்தம் பற்றிச் சேக்கிழார் சுவாமிகள், சிறுத் தொண்ட நாயனார் வரலாற்றிற் குறிப்பிடுகின்றார்.

சிறுத் தொண்டர் பயிரவர் ஆகிய உத்தரா பதியார்க்கு விருந்து படைக்கத் தலைப்படுங் கால், அவர் வற்புறுத்திக் கட்டளையிட்டபடி வீட்டின் புறம்பே சென்று, "மைந்தா வருவாய்" என அழைத்தார். நாயனாரின் மனைவியாரும் அங்ஙனமே தலைவன் பணி தலை நின்று, "செல்ல மணியே! சீராளா! வாராய்! சிவனார் அடியார் யாம் உய்யும் வகையால் உட னுண்ண அழைக்கின்றார்" என்று ஓலமிட்டார். உடனே பள்ளியினின்று ஓடி வருவான் போலச் சீராளன் பரமன் அருளால் உயிர் பெற்று எழுந்து ஓடி வந்தான். வந்த மகனை எடுத்துத் தழுவி அணைத்துக் கடிதிற் போந்தனர். ஆனால் அதற்குள் பயிரவராம் முதல்வர் மறைந்து விட்டார். இருவரும் சிந்தை கலங்கித் திகைத்து வீழ்ந்து தெருமந்தனர். அந்நிலையில்



சேக்கிழார் சுவாமிகள், குன்றத்தூர்.

இறைவன் அவர்களுக்கு வெளிப்பட்டுச் சோமாஸ்கந்த மூர்த்தமாகக் காட்சி கொடுத் தருளினர்.

"செய்ய மேனிக் கருங்குஞ்சிச்
செழுங்கஞ் சுகத்துப் பயிரவர்யாம்
உய்ய அமுது செய்யாதே
ஒளித்த தெங்கே எனத்தேடி,
மையல் கொண்டு புறத்தணைய
மறைந்த அவர்தாம், மலைபயந்த
தைய லோடும், சரவணத்துத்
தனய ரோடும் தாம் அணைவார்"

பிற அடியார்களுக் கெல்லாம் அம்மையும் அப்பனுமாக மட்டில் வெள்விடை மேல் தோன்றிக் காட்சி கொடுத்து அருள்புரியும்

சிவபிரான், சிறுத்தொண்டர்க்கு மட்டும் சோமாஸ்கந்த மூர்த்தமாக வந்து தோன்றி அருள்புரிந்தான் எனச் சேக்கிழார் சுவாமிகள் கூறுகின்றார். சிறுத்தொண்டரின் குடும்பம் முழுவதுமே தம்மை விரும்பி வழிபட்டுப் பணி புரிந்ததனால், சிவபிரானும் அவர்களைத் தம் குடும்பத்துடன் போந்து ஆட்கொண்டருளினர் போலும்! சிறுத்தொண்டர் தம்மையும், திருவெண்காட்டுநங்கை-சந்தனத்தம்மை என்னும் இருவரும் உமாதேவியையும், சீராள தேவர் முருகனையும் என்றும் பிரியாதே இறைஞ்சி இருத்தற்காக, இறைவன் அவர்களை உடன் கொண்டு ஏகினார் எனக் கூறுகின்றார் சேக்கிழார் பெருமான்!

" கொன்றை வேணி யார்தாமும்
பாகங் கொண்ட குலக்கொடியும்,
வென்றி நெடுவேல் மைந்தரும்தம்
விரைப்பூங் கமலச் சேவடிக்கீழ்
நின்ற தொண்டர் மனைவியார்
நீடும் மகனார் தாதியார்
என்றும் பிரியா தேஇறைஞ்சி
இருக்க உடன்கொண் டேகினார் "

## ஆறும், சார்பும் :

முருகனுக்கும், ஆறு என்னும் எண்ணுக்கும் பெரிதும் தொடர்பு உண்டு. முருகனின் திருமுகங்கள் ஆறு. மந்திர எழுத்துக்கள் ஆறு. படை வீடுகள் ஆறு. எனவே, சேக்கிழார் சுவாமிகள் தமது நூலிலும் ஆறு இடங்களில் முருகனைப் பற்றிய குறிப்புக்களை ஆறு வகைகளில் விரவ வைத்தருளினர் போலும்! மேலும், தேவார ஆசிரியர்களின் முறையினைப் பின்பற்றி முருகனைத் தனியாக அன்றிச் சிவபெருமானோடு சார்த்தியே குறிப்பிட்டருளியுள்ள திறமும் கருதியுணரற்பாலது.

இங்ஙனம் பெரிய புராணத்தில் ஆங்காங்கே சேக்கிழார் பெருமான் முருகனைப் பற்றிக் குறிப்பிட்டிருத்தல், அவர் தம் இளமைப் பருவத்தில் குன்றத்தூர்க் குன்றின்மீது கோயில் கொண்டருளியுள்ள முருகப் பெருமானை வழிபட்டு மகிழ்ந்ததன் பயனே எனக் கொள்ளுதல் பொருந்துவதேயாகும் எனலாம்.

எனவே, நாம் சேக்கிழார் சுவாமிகளைக் காணும் பேறு பெறாவிட்டாலும், அவர் ஓடி ஆடி ஏறி உலாவி மகிழ்ந்த குன்றத்தூர்க் குன்றினைக் கண்டு மகிழும் பேறு பெற்றுள்ளோம்! இக்குன்றின் மீது சேக்கிழார் சுவாமிகள் வழிபட்டு அருள்பெற்ற முருகனை, நாமும் வழிபட்டு அருள் பெற்று உய்யும் வாய்ப்பினைப் பெற்றுள்ளோம்!

அவ்வாய்ப்பு மேலும் மிகுதிப்படும் வகையில், இச் சிவராத்திரித் திருநாளில் (20-3-63) திறக்கப் பெற்ற இத் திருமலைப் பாதையினை அமைத்துக் கொடுத்து உதவிய பெருந்தகையார்க்கும், சேக்கிழார் திருமரபில் தோன்றி அவரைப் போலவே சிறந்த முறையில் அமைச்சராக விளங்கி, இத்திருமலைப் பாதையினைத் திறந்து வைத்தருளிய மாட்சிமிகும் நம் அறநிலைய அமைச்சர் அவர்களுக்கும், நம்மனோர் அன்பும் நன்றியும் என்றும் உரியனவாகும்.

தூக்கு சீர்த்திருத் தொண்டத் தொகைவிரி
வாக்கி னாற்சொல்ல வல்ல பிரான் எங்கள்
பாக்கி யப்பய னாப்பதி குன்றைவாழ்
சேக்கி ழான்அடி சென்னி இருத்துவாம்.

—சிவஞானசுவாமிகள்.

## வேண்டுகோள்

சேலம் கோட்டை ஸ்ரீ அழகிரிநாத சுவாமி கோயில் திருப்பணி வேலை பூர்த்தியாகி வருகின்றது. மகாசம்ரோக்ஷணம், சோபகிருது வருஷம் ஆனி மாதத்தில் நடைபெற இருக்கிறது. மகாசம்ரோக்ஷணத்திற்காகப் பக்தர்கள் பொருள் உதவி, தன உதவிகள் செய்யவும், அங்ஙனம் செய்பவர்கள் தேவஸ்தான நிர்வாக அதிகாரிக்கு அனுப்பி ரசீது பெற்றுக்கொள்ளவும் கேட்டுக் கொள்ளுகின்றேன்.

A. N. பத்மநாப அய்யர்.
நிர்வாக அதிகாரி.

# சேந்தமங்கலம் கோயிற் கல்வெட்டு

திரு. T.N. இராமச்சந்திரன் அவர்கள், M A., F.A.S.

சேந்த மங்கலம் ஸ்ரீ **ஆபத்சகாய ஈசுவரர்** கோயிலானது, அவனியாளப் பிறந்தான் திரிபுவன சக்கரவர்த்திகள் — **கோப்பெருஞ்சிங்கன்** (கி. பி. 1243) என்னும் அரசனுற் கட்டப்பெற்றது. இக் கோயிலைச் சுற்றி ஒரு கோட்டை மதிற் சுவர் அமைந்துள்ளது. அதன் மூலைகளில் மதில் முகப்பில் ஏறுதற்கு வசதிகள் செய்யப் பட்டிருக்கின்றன. இக் கோயிலுக்குள்ளேயே **மூன்றும் இராஜராஜ சோழன்** (கி. பி. 1216-1246), கோப்பெருஞ் சிங்கன் என்னும் பல்லவ மன்னனுல் சிறை வைக்கப்பட்டிருந்தான் போலும்! அக் காலத்தில் அரசர்களுக்குள் அடிக்கடி போர்கள் நிகழ்ந்து வந்தமையால், கோயிலின் பாதுகாப்புக்காகக் கோட்டை கட்டப் பெற்றது. கோப்பெருஞ் சிங்கனின் காலத்தில், கோட்டை மதில்கள் சூழ்ந்த இக் கோயிலானது போர் வீரர்கள் தங்கிச் செயல் புரியும் ஒரு படை வீடாக இருந்திருத்தல் வேண்டும். நாளடைவிலும் காலப் போக்கிலும் இவ்விடம் முதன்மை இழந்ததனுல், இக் கோட்டையானது சிதைந்து சீரழிய நேர்ந்துவிட்டது.

இக் கோயிலின் கர்ப்பக்கிரகத்தைச் சுற்றியுள்ள சுவரில், கோப்பெருஞ் சிங்கனின் கல்வெட்டுக்கள் காணப்படுகின்றன. பிற்காலத்து விஜயநகர் அரசராகிய **இரண்டாம் ஹரிஹரர்** கல்வெட்டுக்களும் கூட இங்கே அமைந்துள்ளன. கோயிலின் பகுதிகள் பலவற்றில், பிற்காலச் சோழ மன்னர்களின் கட்டிடக்கலைத்திறன் விளங்குகின்றது. **பைரவர், சூரியன், கஜலட்சுமி, கணேசர், பாலசுப்பிரமணியர், உமாசகிதர், பிரம்மா லிங்கோற்பவர், தட்சிணுமூர்த்தி** ஆகியோரின் அழகிய சிலைகள், அவ்வவற்றிற்குரிய சுவர் மாடங்கள் ஆகிய பஞ்சரங்களினின்று எடுத்துக் கோயிலுக்குள் தொகுத்து வைக்கப் பெற்றுள்ளன. கோயிலின் தெற்குப் பக்கச் சுவரில் பின்வரும் கல்வெட்டு அமைந்திருக்கின்றது :

> " ஸ்வஸ்தி ஸ்ரீ : திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ அவனியாளப் பிறந்தான் கோப்பெருஞ்சிங்க தேவர் யாண்டு 15-ஆவது, பெருமகள் உடையார் அரையன் உதய பெருமாள் ஆன தொண்டைமான், உடையார் வானிலை கண்டேஸ்வரம் உடைய நாயனுர்க்கும்; திருக்காமக் கோட்டம் உடைய பெரிய நாச்சியார்க்கும்...... "

அச் சுவரிலேயே அமைந்துள்ள இரண்டாவது கல்வெட்டு, பின்வருமாறு காணப்படுகின்றது :

> " சகல புவன சக்கரவர்த்திகள் ஸ்ரீகோப்பெருஞ்சிங்க தேவர் யாண்டு ஒன்பதாவது சேந்தமங்கலத்து

---

*தொல்பொருள் ஆராய்ச்சித்துறைச் சிறப்பு அலுவலர், 13-12-62 பார்வையீட்டு அறிக்கை மொழிபெயர்ப்பு.*

உடையார் வானிலை கண்ட ஈசுவரம் உடைய நாயனூர்க்குத் திருவெண்ணெய் நல்லூர்க் கைக்கோளரில் திருமலை யாடியான வீரக வீரப் பல்லவரையன் இந் நாயனூர்க்கு, அரிசி மாதம் முதல் திருநொந்தா விளக்குக்கு விட்டபடி 32-ம் ரிஷப மக ஆதிரை நாயக நாழியாலே நாள் ஒன்றுக்கு உழக்குநெய் சிவப்பிராம்மணர் வசமே திருமடைப் பள்ளியிலே சந்திராதித்ய வரை அளக்கக் கடவதாகவும் ராசி பொன்னனும் படியனும் ஆட்கொண்டானும் நங்கை கோன் உள்ளிட்டார் வசமே காட்டிக் கொடுத்தேன். இதுபன்மாகேசுவரர் ரட்சை.''

அதே தென் பக்கச் சுவரில் சித்திர வேலைப்பாடு அமைந்த கற்சன்னலை அடுத்து அமைந்துள்ள மூன்ருவது கல்வெட்டு பின்வருமாறு காணப்படுகிறது.

''ஸ்வஸ்திஸ்ரீ சகல புவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ கோப்பெருஞ்சிங்க தேவர்க்கு யாண்டு இரண்டாவது சேந்தமங்கலத்துஉடையார் வானிலை கண்டீசுவரமுடைய நாயனூருக்கு ஜனநாத சதுர்வேதி மங்கலத்துக் காணி உடைய சோலை கோன் மகன் அருளாளன் ஆன தியாக விநோதனேன் இந் நாயனூர்க்குத் திருநொந்தா விளக்கு ஒன்றுக்கு இவ்வாண்டு புரட்டாசி மாதத்து விட்ட பசு 32 மல்லரிஷபம் ஒன்றும் கைக்கொண்டு திரு நொந்தா விளக்கு அதிகை நாயகன் நாழியால் ஒன்றுக்கு உழக்குநெய் திருமடைப்பள்ளியிலே சிவப் பிராம்மணன் வசமே அளக்கக் கடவோம் சந்திராதித்ய வரை அமாசி பொன்னனும் ஆட்கொண்டானும் படியனும் நங்கை கோன் உள்ளிட்டாரும். இது பன்மாகேசுவரர் ரட்சை.''

இக்கோயில் மிகவும் சிதைந்து பாழ்பட்டுக் கிடக்கிறது. உடனடியாகச் செய்ய வேண்டிய பாதுகாப்பு வேலைகள் (1) மிகப்பெரிய அளவில் செடி கொடி புதர்க் காடுகளை அழித்தல் (2) சிதைந்து விழுந்து சிதறிக்கிடக்கும் கற்களை ஒழுங்குபெற அமைத்து முறையாக அடுக்குதல் ஆகும். இதற்குரிய செலவுத் தொகை **இரண்டு** லட்சத்துக்குக் குறையாமல் இருக்கும்.

கோபுரத்தில் ஒருகல்வெட்டு அமைந்துள்ளது. அதற்கு முதற்பகுதி சோழர்களின் கிரந்த எழுத்தில் வெட்டப்பட்டுள்ளது. **கண்டகோபாலன்** என்னும் ஒரு தெலுங்குச் சோழத் தலைவனை **விக்ரம பாண்டியன்** வெற்றி கொண்ட செய்தியை அக் கல்வெட்டு குறிப்பிடுகின்றது. விக்ரமன் அல்லது பராக்கிரம பாண்டியன் என்பவனே, கோப்பெருஞ் சிங்கன் - கண்ட கோபாலன் ஆகிய வர்களிட மிருந்து இந் நாட்டுப் பகுதியை வென்று கைப்பற்றியவனுவான். கல்வெட்டுகள் இக்கோயிலிலுள்ள இறைவனை **வானிலை கண்டீசுவர முடையார்** என்றும், தேவியைப் **பெரிய நாச்சியார்** என்றும் வழங்குகின்றன.

''நாவலூர் நம்பியைப் பேணி வளர்த்த
நரசிங்கனூர்
காவலூர் ஆம்சேந்த மங்கலம் கோப்பெருங்
கழற்சிங்கர்
மேவிய நற்பயன் தந்தநம் அண்ணல் விடை
யுடையார்
சேவடி தாழ்ந்தவர்க்கு இன்பம் குறையா
திருவுடனே''

'சீர்வளம் பொருந்திய நடு நாட்டின்கண் சைவசமய ஆசாரியர் நால்வரில் ஒன்பது-பத்தாம் நூற்றுண்டுகளில் திருத்தலங்களுள் ஒன்றாகிய திருநாவலூரில்

# ஸ்ரீ வைஷ்ணவ குருபரம்பரை

[திரு. K. பட்சிராஜன், B.A.,B.L., திருநெல்வேலி]

( முன் இதழ்த் தொடர்ச்சி )

இவ்விதம் பெரிய நம்பிகளிடத்திலே அர்த்த விசேஷங்கள் கேட்டு இளையாழ்வார் உள்ளம் இவ்வுலக இயல்களினின்று அவரையும் அறியாமலே நழுவிக்கொண்டே வந்தது. ஒரு நாள் வரதன் ஸந்நிதியிலே எண்ணெய்க் காப்பிட வந்த ஒரு ஸ்ரீ வைஷ்ணவர் மிகவும் நலிந்து தள்ளாடி நிற்பதைக்கண்ட இளையாழ்வார் அந்த ஸ்ரீ வைஷ்ணவரை ஸேவித்து "ஸ்வாமீ! தேவரீர் திருமேனி தளர்ந்து தள்ளாடுகிறதே. என்ன காணம் ஸ்வாமீ!?" என்று அன்போடு வினவினர். அந்த ஸ்ரீ வைஷ்ணவரும் சோகம் கலந்த ஒரு முறுவலோடு "ஒன்று மில்லை இளையாழ்வாரே! அடியேன் அன்னம் கண்டு நாட்களாயின. வெறும் தீர்த்தத்திலே சரீரம் எவ்வளவுதான் செல்லும். என்னவோ பகவான் திருவுள்ளம் எப்படியோ?" என்று மெதுவாகப் பதில் கூறினர். இளையாழ்வார் கண்கள் பனி மல்கின. ஆஹா! எம்பெருமானுக்கு இந்நிலையிலும் கைங்கர்யம் செய்யும் இவரல்லவா ஸ்ரீவைஷ்ணவர்! என்று எண்ணி மகிழ்ந்தவராய் அந்தஸ்வாமியை மெதுவாகத்தம் மனைக்கு இட்டுச்சென்று தம்தேவியைக் கூவி "இந்த ஸ்ரீ வைஷ்ணவர் பசியால் மிகவும் நொந்துபோயிருக்கிறர். உள்ளே நான் அருந்தியது போக மீதம் ப்ரஸாதம் இருக்குமே அதை இவருக்கு ஸமர்ப்பி" என்று கூறினர். வந்த வைஷ்ணவர் தம் வாட்டம்தீரும் எனநம்பியிருந்தார். ஆனல் அந்த அம்மாள் உள்ளிருந்தவாறே இங்கு ப்ரஸாதம் கொஞ்சமும் இல்லை. எல்லாம் தீர்ந்துவிட்டதே" எனப்பதிலுரைத்தார். வைஷ்ணவர் முகம் மேலும் கன்றியது. இளையாழ்வார் திடுக்கிட்டார். தாங்கள் அருந்தியது போக மீதம் நிறைய இருக்கவேண்டும் என்பதை அவர் உணர்ந்தார். அந்த வைஷ்ணவர் பசிப்பிணிக்கு வேறு வழி செய்து அவரை அனுப்பி, மனைவந்தார். தம்தேவியை வேறு ஏதோ காரியமாக வெளியே அனுப்பினர். உட்சென்று பார்த்தார். அங்கே ஏராளமான அன்னம் இருப்பதைக் கண்ணுற்ருர். அவர் மனம் பகீர் என்றது. இவ்வளவு சோற்றை வைத்துக் கொண்டா பாவம்! அந்த வைஷ்ணவருக்கு அன்னமில்லை என்ருள் என்று மனைவி பால் சீற்றம் பொங்கியது. அதன் வேகம் தணியும் முன்பே தஞ்சமாம்பாள் மனையினுள் வந்தாள். இளையாழ்வார் அவளை நோக்கிப் பேயைப் பெண்டு பிடித்தது போலல்லவா ஆயிற்று என்கதி! "இடும்பையால் அடர்ப்புண்டு இடுமினோ துற்று என்று இரந்தவர்க்கு இல்லையே என்று நெடுஞ்சொலால் மறுத்த" நீசை நீ! நீ ஒரு ஸ்ரீ வைஷ்ணவ மனையில் இருக்கவே தகாதவள். முன்பொருகால் திருக்கச்சி நம்பிகளை அவமதித்து அபசாரப்பட்டாய். அன்றே உன்னை எச்சரித்தேன். மேலையார் செய்வனவும் செய்யாதனவும் என்ன என்று உனக்குப் படித்துப் படித்து விளக்கினேன். நீ திருந்தியதாகக் காணவில்லை. இன்று மீண்டும் எச்சரிக்கிறேன். நீ இனியும் ஸ்ரீ வைஷ்ணவ அபசாரத்துட்படுவாயாகில் விபரீதம் விளையும் என்பதை இனியாகிலும் உணர்ந்து கொள்." என்று அவளைக் கடிந்து விட்டு வெளியே

---

சேந்தமங்கலம் கோயிற் கல்வெட்டு .. ...

அவதரித்த சுந்தரரை அன்புடன் ஆதரித்து வளர்த்து வந்த அரசன் காவல் நகரான கருட நதிக்குத் தென்பாலுள்ள சேந்தமங்கலம் என்னும் நகரை நரசிங்க முனையரையரும், கோப்பெருஞ்சிங்கனும் அரசாண்ட க்ஷேத்திரத்தில் திருக்கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும்

ஸ்ரீ ப்ரஹந்நாயகி சமேத
ஆபத் சகாய ஸ்வாமி

கோயில் கல்வெட்டுக்களில் வானிலை கண்டீசுவரம் உடையார், பெரிய நாச்சியார் — எனவே கடவுளும், தேவியும் கூறப்படுகிருர்கள்.'

சென்று விட்டார். எனினும் அவர் உள்ளத்திலே அன்று நடந்த நிகழ்ச்சி அவரை உலுக்கி விட்டது. ஏற்கனவே உலகியலிலிருந்து நழுவிக் கொண்டிருந்த அவர் உள்ளமும் மனைவாழ்வும் உலரும் புளியம் பழம் போலாயிற்று: நாட் செல்லச்செல்ல அவ்வுள்ளத்தோடு மனைவாழ்வின் பசையினின்று பிரிந்து ஒப்புக்காகவே அவ்வாழ்வோடு ஒட்டி நின்றது. எந்தச்சிறு மோதலும் அத்தோட்டை உடைத்துப் பழத்தினின்று வேருகக் கூடிய நிலை. அத்தாக்கலும் வெகு விரைவிலே வந்தது.

மேற்சொன்ன நிகழ்ச்சி நடந்த சில நாட் கழித்து ஒருநாள். இளையாழ்வார் மனையின் ஒரு பகுதியிலேயே தங்கியிருந்த ஆசாரியர் பெரிய நம்பிகளின் தேவி விஜயாம்பாளும் இளையாழ்வார் தேவி தஞ்சமாம்பாளும் ஒரே காலத்தில் கிணற்றிலே நீர் இரைத்தார்கள். அப்போது விஜயாம்பாள் தூக்கிய குடம் சற்று அலம்பி நீர் கிணற்றிலே விழுந்தது. அதிற் சில துணிகள் தஞ்சமாம்பாள் தூக்கிக் கொண்டிருந்த குடத்திலே விழுந்தன. அதைக்கண்ட தஞ்சமாம்பாள் விஜயாம்பாளை நோக்கி "என்ன அக்கிரமம்! காலம் கெட்டுவிட்டது. ஏதோ போனுல் போகிறது என்று, தாழ்ந்த குலத்தவரும் ஆசாரக் குறைவுள்ளவர்களும் ஆன உங்களை அபிமானத்தைப் பொருத்து எங்கள் குடங்களுக்கருகே குடம்வைக்க இடம் கொடுத்தால் இப்படியா செய்கிறது. இது "ஆசாரிய பத்தினி" என்ற செருக்குத்தானே, ஆசாரியன் வீட்டளவிலே இருக்கவேண்டும்" என்று இன்னும் பற்பல படியாக விஜயாம்பாள் மனம் நோவ வார்த்தைகளைக் கொட்டிவிட்டாள். விஜயாம்பாள் திகைத்துப் போனுள். ஒன்றும் பதில் கூருமல் மனம் மிகவும் புண்பட்டவளாய், கண்ணீர் மாலையாகப் பெருகத் தன்குடத்தை எடுத்துக் கொண்டு வீடுதிரும்பினுள். கண்ணீர் சோரவரும் தேவியைக் கண்ட பெரிய நம்பிகள் அதன் காரணம் வினவ விஜயாம்பாளும் நடந்தவற்றை அப்படியே விண்ணப்பித்தாள். நம்பிகள் தேவியாரைநோக்கித் "தவறுஉன்பக்கம் தான். ஆசாரத்தைப் போக்குபவர்களுடன் பழகும் பொழுது அவர்கள் குறைவு படும்படி நீ நடந்து கொள்ளலாமா? சரி, நம் காஞ்சி வாழ்வு முடிவடைய வேண்டியது தான். இனியும் நாம் இங்கு இருப்போமாகுல் மேலும் பாகவத அபசாரத்துக்கு உள்ளாக நேரிடும்" என்று கூறி, இளையாழ்வார் இச் செய்தி அறியும் முன்பே நாம் இதைவிட்டுப் போய்விடுவதுதான் உசிதம் என்று விஜயாம்பாளையும் அழைத்துக் கொண்டு திருவரங்கம் நோக்கிப் பயணமானுர்.

அப்பால் இளையாழ்வார் தம் திருமாளிகைக்கு வந்தவர் தமது அனுட்டானங்களை முடித்து எப்போதும் போல் ஆசாரியரைச் சேவிக்க, அவர் எழுந்தருளியிருந்த திருமாளிகைப் பகுதிக்குச் சென்ருர். அங்கு அவரைக் காணவில்லை. ஒன்றும் புரியாதவராய் அக்கம் பக்கங்களில் விசாரிக்கையில் அவர்கள் "அவர் தேவியாரையும் கூட்டிக் கொண்டு ஸ்ரீரங்கம் செல்வதாகக் கூறிச் சென்றுவிட்டார்" என்று கூறினர். இளையாழ்வாருக்கு ஒருபுறம் வியப்பு; மற்ரெருபுறம் தம்மையறியாமலே ஏதேனும் ஆசாரிய அபசாரம் செய்து விட்டோமோ என்ற பயம்; அருகில் உள்ளாரை அவர் இவ்வளவு அவசரமாகச் சென்ற காரணம் ஏதும் தெரியுமோ என்று வினவினுர். அவர்கள் தீர்த்தத் துறையில் இரு தேவியாருக்குள்ளும் நிகழ்ந்தவற்றையும், நம்பிகள் தம் தேவியாரையே கண்டித்து மேலும் பாகவதாபசாரம் விளையுமோ என்று அஞ்சிச் சென்றுவிட்டதையும் கூறினர். கேட்ட இளையாழ்வாருக்குச் சீற்றம் மிகுந்தது. நேரே மனை சென்ருர். தஞ்சமாம்பாளை நோக்கி "பாபாநாம் ஆகரஸ்ஸ்த்ரிய:" (பெண்களே பாவங்களுக்கு இருப்பிடம்) என்று சாத்திரங்கள் கூறுவதை மெய்ப்பித்து விட்டாய்; முன்பு பரம பாகவதரான திருக்கச்சி நம்பிகள் விஷயத்தில் பெருத்த அபராதம் செய்தாய். அப்போதே உன்னை எச்சரித்தேன். சில தினங்களுக்கு முன் தான் பசியால் நிறைந்த ஸ்ரீ வைஷ்ணவரை "ஒரு பருக்கை அன்னமும் இல்லை" என்று பொய் கூறி வெளியேற்றினுய். மீண்டும் உன்னை எச்சரித்தேன். இப்போதோ எல்லாவற்றிற்கும் சிகரமாக என் உயிர்க்காவலனுன ஆசாரியன் தேவியை அவமதித்து, அதனுல் அவர் மனம் புண்பட்டு அவரை இங்கிருந்தே போகும்படி செய்து விட்டாய். சீ! நீயும் ஒரு பத்தினி! "பாம்போடு ஒரு கூரையில் பயில்வார்போல்" உன்னோடு நானும் இம்மனையில் இன்னும் வாழ்ந்து கொண்டிருக்கிறேன். இனி உன்னுடன் பேசுவதே தவறு என்று கூறி வெளியே சென்று விட்டார். அது முதல் இளையாழ்வார் தஞ்சமாம்பாளோடு முகம்கொடுத்துப் பேசுவதை நிறுத்திவிட்டார். அவர் உள்ளத்

திலே இனி மண வாழ்வை விட்டு விடவேண்டியது தான் என்ற எண்ணம் தோன்றி வளர்ந்தது. ஆனுல் அத்துறவைப் பகிரங்க ஆரவாரமான மனத்தாங்கல்கள் நிகழாவண்ணம் மேற்கொள்ள ஒருசரியான சந்தர்ப்பத்தை எதிர் நோக்கி இருந்தார். அச்சந்தர்ப்பமும் விரைவிலே நிகழ்ந்தது.

தஞ்சமாம்பாளின் தம்பி ஒருவனுக்கு விவாஹம் நடப்பதாக இளையாழ்வாருக்கு அவருடைய மாமனுர் வீட்டிலிருந்து சிலர் திருமண அறிக்கை ஓலையைக் கொண்டு வந்தனர். தஞ்சமாம்பாளுக்கு ஒரே உற்சாகம். வீட்டிலே வந்தவருக்குத் தடபுடலாக விருந்துக்கு ஏற்பாடாயிற்று. இளையாழ்வார் கோவில் கைங்கர்யத்திற்கு எழுந்தருளிவிட்டார். அருளாளன் சன்னிதியில் அவர் கைங்கரியத்தில் ஈடுபட்டிருக்கும் நேரம் யாரோ ஒரு யாத்திரிகர் இளையாழ்வாரை அண்டி மிகவும் பசியாக இருக்கிறது. ஏதாகிலும் பிரசாதம் வேண்டும் என்று வேண்டினுர். அப்போதை நிலையில் பெருமாளுக்கு இன்னும் தளிகை சமர்ப்பித்து ஆண்டருளப் பண்ணுமையால், அந்த யாத்ரிகனுக்கு இளையாழ்வாரால் பிரசாதம் ஒன்றும் கொடுக்க இயலவில்லை. ஆனுல் வாடி நலிந்த அவன் முகத்தைக் கண்ட இளையாழ்வாருக்கு அவனுக்கு உதவவேணடும் என்ற ஆத்திரம் மிகுதியும் இருந்தது. கைங்கர்யம் செய்யும் மத்தியில் வெளிச்செல்லவும் இயலாது. ஆகவே அவர் அந்த யாத்ரீகனை அருகழைத்துத் தன் வீட்டின் அடையாளம் கூறி "அங்குப்போய் நான் சொன்னதாகக் கூறிப் பிரசாதம் பெற்றுக் கொள்ளும்" என்று கூறி அவனை அனுப்பினுர். வீட்டிலே விருந்திற்கு ஏற்பாடு நடப்பதை அறிந்தவராகையால் யாத்ரீகனுக்கு ஏதாவது கிடைக்கும் என்பது அவரது நம்பிக்கை. போன யாத்ரீகன் இளையாழ்வார் வீட்டிலே சென்று அவர் தேவியாரைக்கூவித் தன் நிலைமையையும் இளையாழ்வார் நியமனத்தையும் கூறிப் பசி தீர ஏதேனும் கிடைத்தால் போதும் என்று வேண்டினுர். ஆனுல் தஞ்சமாம்பாளோ சற்றும் கருணையின்றி, கணவன் கட்டளை என்பதையும் மறந்து இங்கு ஒன்றும் இல்லை என்று கையைவிரித்து உள்ளே சென்றுவிட்டார். யாத்ரீகன் ஒன்றும் தோன்ருமல் வாசலில் நின்று கொண்டிருந்தான். உள்ளே விருந்தினர்கள் உணவருந்திக்கொண்டிருந்தனர். அவர்கள் செய்த ஆரவாரங்களிலிருந்து உள்ளே விருந்து நடக்கிறது என்பதை யாத்ரீகன் உணர்ந்தான். நேரே சன்னிதிக்கு வந்து இளையாழ்வாரைப் பார்த்து "சுவாமி, தேவரீர் நியமனப்படி திருமாளிகையில் சென்று விண்ணப்பித்தேன். தேவரீர் தேவியார், முகம் கொடுத்தும் கூடக் கேளாமல் ஏதும் இல்லை என்று கூறிவிட்டார். ஆனுல் உள்ளே ஒரு விருந்து நடக்கும் ஆரவாரம் அடியேன் செவியில் விழுந்தது" என்று விண்ணப்பித்தார். இளையாழ்வார் கோயிலில் பெருமாள் கண்டருளப் பாடு ஆகிவிட்டதால் கோயில் பிரசாதத்தால் அந்தயாத்ரீகரைத் திருப்தியாக அமுது செய்தருளப்பண்ணினுர். பின் திருமாளிகைக்கு எழுந்தருளிப் பார்க்கையில் யாத்ரீகர் சொன்னது முற்றிலும் உண்மை என்பது புலனுயிற்று. தேவிகளை அழைத்தார். தன்னுடன் வார்த்தையாடாத அவர் தாமாகத் தன்னை அழைத்ததில் மிக மகிழ்ச்சி கொண்ட தேவியார், இளையாழ்வார் பக்கல் வந்தார்.

இளையாழ்வார் அவளை நோக்கி "நாம் சற்று முன்பு ஒரு ஸ்ரீ வைஷ்ணவரை அனுப்பினேமே அவருக்கு உணவு பரிமாறினுயோ? என்று கேட்க, அவள் அலக்ஷியமாக "கொஞ்சம் தான் பிரசாதம் இருக்கிறது. கொஞ்சம் இரும். வேண்டுமானுல் பண்ணிப் போடுகிறேன் என்று சொன்னேன். அடேயப்பா அவருக்கு வந்தகோபம்! உடனே பதில் கூருமல் சென்று விட்டார்." என்று பதில் இறுத்தாள். இளையாழ்வாருக்கு உள்ளத்தே கோபமும் ஆச்சரியமும் மிகுந்தது. ஆனுல் அவற்றை உள்ளடக்கிக் கொண்டு "நல்லது போனுல் போகிருர்... ...அது சரி திருக்கல்யாணப்பத்திரிகையைக் கொண்டு வந்தார்களே அவர்களை யெல்லாம் குறைவற உபசரித்தாயா? என்றுவினவினுர். அவள் 'ஓ! ஒரு குறைவின்றிச் சம்பிரமமாக விருந்து செய்தேன். இன்னும் பத்துப்பேர் விருந்துண்ணும் அளவு மிச்சமும் உள்ளது" என்று குதூகலமாக விடையளித்தாள். கேட்ட இளையாழ்வாரின் உள்ளம் உடைந்தது. தாம் எதிர்பார்த்த சந்தர்ப்பம்வந்துவிட்டது என்பதை உணர்ந்தார். அந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்தி விடுவது என்றும் சங்கல் பித்தார். தம் உள்ளக் குமுறலை ஒருவாறு உள்ளடக்கித் தம் தேவியாரோடும், விருந்தினர்களோடும் சரசமாக உரையாடினுர். பாவம் தஞ்சமாம்பாள் தன் கணவர் தனக்கு இதுவரை

செய்த தவறை உணர்ந்து கொண்டார் என்று எண்ணி மகிழ்ந்தாள்.

சிறிது நேரத்திற்கு அப்பால் இளையாழ்வார் தம்பதிகளுக்கிடையே, கீழே காணும் சல்லாப உரையாடல் நிகழ்ந்தது.

இளையாழ்வார் :—ஆமாம் நீ தம்பி கல்யாணத்திற்குப் போக வேண்டாமா?

தேவி :—பருப்பில்லாமலா கல்யாணம்!

இளை :— ஆமாம் நீ போவது என்றால் எப்போது போகத் தீர்மானித்திருக்கிறாய்? கல்யாணத்திற்கு இன்னும் நாளிருக்கிறதே! அதற்கு ஒன்றிரண்டு நாட்களுக்கு முன்னதாகப் போனால் போதுமா? என்ன தீர்மானித் திருக்கிறாய்?

தேவி :— நன்றாக இருக்கிறது. ஒன்றிரண்டு நாட்களுக்கு முன்பா? அங்கு நான் போய்த் தான் அவ்வளவும் நடக்க வேண்டும். அங்கு யாருக்கு என்ன தெரியும். இப்பத்திரிகையைக் கொணர்ந்தவர்களுடனே செல்வது தான் சரி. அவர்கள் ஒன்றிரண்டு நாட்கள் இருப்பார்கள். அவர்களுடன் போய்விடுகிறேன்.

இளை :— அது சரி! அவர்கள் எப்பொழுது வேண்டுமானாலும் புறப்படலாம். நீ— பிறந்து வீடுபோயும் வெகு நாளாயிற்று. இப்பொழுது ஒரு சுபகாரியத்தை முன்னிட்டுப் போகிறாய். அதனால் ஒரு நாள் பார்த்துத்தான் நீ புறப்படவேண்டும் — இருபார்த்து விடுகிறேன். (உள்ளே யோசிக்கிறார்). சரி, நீ சீக்கிரம் போக வேண்டும் என்பது உன் தீர்மானமானால், நீ இன்றே புறப்படவேண்டும். இல்லையானால் பத்து நாள் கழித்துத்தான் போகவேண்டும். வேறு நல்ல நாளில்லை.

தேவி :— பத்து நாளா! அது முடியாது. இன்றே புறப் பட்டு விடுகிறேன். ஆனால்...... நீங்கள் இங்குத் தனியே.

இளை :— என்னைப் பற்றிய கவலை இனி உனக்கு வேண்டாம். போ! சம்பிரமமாகக் கல்யாணத்தையெல்லாம் நடத்திவை. எல்லாம் ஈசுவர சங்கல்பம் இருந்தால் நானும் வந்து சேருகிறேன்.

தேவி :—உங்களுக்குக் கொஞ்சம் சிரமமாக இருக்குமே என்று தான் தயக்கம். ஆனால் சமீபத்தில் நாளில்லையென்றால் வேறு என்ன செய்வது!

என்று கூறித் தன்னுடைய நகைள், பட்டாடைகள் முதலான வற்றில் பெரும் பகுதியைப் பெட்டியில் எடுத்துவைக்கத் தொடங்கினாள். இளையாழ்வார் அவளை நோக்கி "எல்லா வற்றையுமே எடுத்துப்போய் விடு. இங்கு ஒன்றையும் வைக்காதே, அங்கு போய் நீ சீக்கிரம் திரும்பி வரப்போவதில்லை. இதோ நாம் சேமித்து வைத்திருக்கும் திரவியங்களையும் உன்னிடமே தந்து விடுகிறேன். கொண்டு போய்விடு. நீ இல்லை. நான் வீட்டிற்கு எப்பொழுது வருகிறேனே, போகிறேனே? ஒருவரும் இல்லாமல் திரவியங்களை வீட்டில் வைத்திருப்பது ஆபத்து என்றார். தேவியும் "ஆமாம் நன்றாகச் சொன்னீர்கள்! நானே யாவற்றையும் கொண்டுபோய் விடுகிறேன்" என்று எல்லாவற்றையும் பெட்டியிலே வைத்துக்கொண்டாள். சற்று நேரத்தில் விருந்தினரும் தஞ்சமாம்பாளும் இளையாழ்வாரிடம் விடை கொண்டு, புறப்பட்டனர்.

இளையாழ்வார் உள்ளம் ஒரு பெரிய சுமையை இறக்கி வைத்தது போன்ற சாந்தியை அடைந்தது.

(தொடரும்)

---

## நடைபெற்ற நிகழ்ச்சிகள்

1. சிவகங்கை ஸ்ரீ விசாலாக்ஷி அம்பாள் ஸமேத ஸ்ரீ விசுவநாத ஸ்ரீ சுப்ரமணிய சுவாமி கோயிலில் அஷ்ட பந்தன கும்பாபிஷேகம்.
2. சென்னை சிந்தாதிரிப் பேட்டை ஸ்ரீ ஆதிபுரீஸ்வரர் கோயிலில் பிரம்மோற்சவம்.
3. சிக்கல்: ஸ்ரீ நவநீதேஸ்வர சுவாமி கோயில் சித்திரை பிரம்மோற்சவம்.

# திருவிருத்தம்

(நான்காந் திருமுறை)

திரு. வித்வான். வை. சுந்தரேச வாண்டையார், அண்ணாமலைப் பல்கலைக்கழகம்.

விருத்தம் என்பது வட்டம் - விரோதம் - ஒரு வகைக் கவி யெனப் பல பொருள் தரும். முன்பு விருத்தம் என்றே வழங்கி வந்த செய்யுளைப் பிற் காலத்தார் கலிப்பாவின் இனத்துள் ஒன்ருன கலித்துறை யெனக் கொண்டனர். கலிப் பாவின் இனத்துக்குக் கலிநிலைத்துறை, காப்பியக் கலித்துறை என்பனவே அமையும். கட்டளைக் கலித்துறை கலிப்பா இனத்தில் சேராது. இதற்குக் கலித்தளையும் இல்லை. அதற்குரிய துள்ளல் ஓசையும் இல்லை. இது வெண்டளை தட்டுச் செப்பலோசையில் வருகிறது. நம்மாழ்வார் பாடிய திருவிருத்தமும் இப் பெயராதலை அறிக.

திருவிருத்தம் என்ற தலைப்பில் அப்பர் சுவாமிகள் முப்பத்து நான்கு பதிகங்களைத் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார்கள். அவைகளிலுள்ள அரும்பொருட்கள் சிலவற்றைக் காண்பாம்.

அப்பர் சுவாமிகள் கோயில் திருவிருத்தத்தில் இறைவனுடைய பாதாதி கேசங்களைக் கூறுபவராய் அவற்றைக் கண்ட கண்களினுல் காணத் தகுவன அளவுடைய பொருள் வேறு எவை இருக்கின்றன என்கிருர்.

'திருவடியைக் கண்ட கண் கொண்டு மற்றினிக் காண்ப தென்னே' என்று தொடங்கி உச்சியிலுள்ள 'மத்த மலர் கண்ட கண் கொண்டு மற்றினிக் காண்ப தென்னே' என்கிருர். ஒரு பாசுரத்தில் சிவபெருமானுடைய திருப் பெயர்களில் நந்தி என்பதும் ஒன்றுஎன்று கூறப்படுகிறது. இதனை 'நந்தி நாமம் நமச்சிவாயவே' என்ற சம்பந்தப் பெருமான் வாக்காலும் அறியலாகும். இனி ஸ்ரீபஞ்சாட்சரத்தைச் சேமித்து வைத்த பொருளாகி என்கிருர். சேமித்து வைத்த பொருள் சமயத்துக்கு உதவும். அதுபோலவே ஸ்ரீ பஞ்சாட்சரமும். 'நாம் உற்ற நடுக்கந் தீர்ப்பது நமச்சிவாயவே' என மற்ருேரிடத்தில் கூறுகின்ருர்.

இதனையே சேக்கிழார் பெருமானும் 'அற்ற முங்காக்கும் அஞ்செழுத்து' என்கின்றனர்.

சரித்திரத்துக்கு அகச் சான்ருக வரும் பகுதிகள் இந்தப் பதிகத்திலுண்டு. அது "ஊனத்தைநீக்கி உலகறிய என்னை ஆட்கொண்டவன்" என்னும் பாசுரத்தில் வருவது. அவ்வரலாறு சிவபெருமான் நஞ்சை உண்டதைப் பற்றியதாகும். திரிபுரம் மூன்றையும் எரித்த இறைவன் என்கிருர் ஒரு பாசுரத்தில். திரிபுரம் என்பதே முப்புரத்தைக் குறிப்பதாக, மூன்று என்பது வழுவன்ருே எனின் அன்று. திரிபுரம் என்பதைப் பண்புத் தொகையாக அன்றி வினைத் தொகையாகக் கொண்டால் வழுவன்று.

ஆகாயத்தில் திரிகின்ற புரம் என்ருகும் என்பதினைப் 'பறவைப் புரமெரித்தாய் எம்மையாளும் பசுபதியே' என்று விளக்குகின்ருர்.

இறைவன் திருமுகத்தைச் சிரித்த முகமென்று சொல்லுகிருர். அதையே,

"குனித்த புருவமுங் கொவ்வைச் செவ்
வாயிற் குமிண் சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற் பால் வெண்ணீறும்
இனித்த முடைய எடுத்த பொற்
பாதமுங் காணப் பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவதே
யிந்த மாநிலத்தே"

எனக் குறிக்கின்ருர். பின்னும் 'முடிகொண்ட மத்தமும் முக்கண்ணின் நோக்கும் முறுவலிப்பும்

எனத் தொடங்கும் பாசுரத்திலும் குறிக்கின்றார். அமைத்த திருக்கரம் ஐந்தொழிலில் காத்தல் தொழிலைக் குறிப்பதாகச் சித்தாந்த நூல்கள் கூறும். இவர் அது தம்மை "என்று வந்தா யென்னு மெம்பெரு மான்றன் திருக்குறிப்பே" என்று கூறுகிறார்.

இனி, கோயில் திரு விருத்தத்தில்,

"படைக்கல மாகவுன் னமத் தெழுத்தஞ்சென்
நாவிற் கொண்டேன்
இடைக்கல மல்லே னெழுபிறப் பும்முனக்
காட் செய்கின்றேன்
துடைக்கினும் போகேன் தொழுது
வணங்கித்தூ நீறணிந்துன்
அடைக்கலங் கண்டா யணிதில்லைச்
சிற்றம் பலத்தரனே"

என்கின்றார்.

சிவபெருமான் தம்முடைய திருவடியைத் தூக்கியது நான்கு இடத்தில் என்கின்றார். முதலாவது தக்கன் யாகத்தில் சந்திரனைத் தேய்ப்பதற்கு. அடுத்து எமனை உதைப்பதற்கு. அடுத்தது பிரம விட்டுணுக்கள் தேடும் பொருட்டு மறைக்க எடுத்தது. இறுதியாகக் காலை எடுத்தது தில்லையில் திருக்கூத்தாட. அதுவே எங்களை ஆட்கொள்வதாகும் என்று,

சாட வெடுத்தது தக்கன்றன்
வேள்வியிற் சந்திரனை
வீட வெடுத்தது காலனை
நாரணன் நான்முகனும்
தேட வெடுத்தது தில்லையுட்
சிற்றம் பலத்து நட்டம்
ஆட எடுத்திட்ட பாதமன்
றேநம்மை யாட் கொண்டதே

என்ற பாசுரத்தால் விளக்குகிறார்.

சீகாழி நெய்தல் நிலத்துத் தலமாகக் கூறப்படுகிறது. அதனைத் 'திரைவாய்ப் பெருங்கடல் முத்தங் குவிப்ப முகந்து கொண்டு, நுரைவாய் நுளைச்சியர் ரோடிக் கழுமலத் துள்ளழுந்தும்' என்பதனாலும், இனி அது மருத நிலத்து ஊராகவும் கொள்ளப்படும் என்பதை,

'மடைவாய்க் குருகினம் பாளைவிரிதோறும்
வண்டினங்கள்
பெடைவாய் மதுவுண்டு பேரா திருக்கும்
பெரும்பதியே'

என்கின்றார்.

பெருமானது 'அடிநிழற் கீழதன்றோ வென்ற னுருயிரே' என்று ஆருயிர்த் திருவிருத்தத்தில் குறிக்கின்றார். இதனை,

'இருகாற் குரம்பை யிதுநா
னுடைய திதுபிரிந்தால்
தருவா யெனக்குன் திருவடிக்
கீழொர் தலைமறைவே'

என்று வேண்டிக் கொண்டதின் பயனாகப் பெற்ற பேற்றைக் கூறியதாகும்.

கட்டழகியான ஒரு மங்கை கந்தையாடை புனையினும் அதுவும் அவளுக்கு அழகு செய்வதாக இருக்கும். அன்றிக் குரூபியான ஒருத்தி பட்டாடை புனையினும் அது அங்கு அவலட்சணமாகவே தோன்றும். அதுபோல அழகில் தன்னின் ஒப்பாரும் மிக்காரும் இல்லாத பேரழகினன், சொக்கன் என்னும் பெயருடையவனாகிய எம்பெருமானின் திருவுருவில் அருவருக்கத் தகுந்த விகாரமான பொருளாகிய வெண்டலையுமல்லவா அணிகலனாயிருந்தது என்று திருச்சோற்றுத்துறைப் பாசுரத்தில் பாராட்டுகிறார். அவரே அச்சந் தரத் தகுந்த நாகமும், மழுமானும் அவனுக்கு அழகாயின என்றும் அங்குக் கூறுகின்றார்.

நாவுக்கரசர் துதி நூலாகிய தமிழ்மறையில் காவியச் சுவைக்குரிய அலங்காரங்கள் வருவனவும் போற்றத் தக்கன. பெருமான் யானை உரித்த நாளில் அதன் கொம்பு ஒடிந்து தலையில் விழுந்ததோ என்னும்படி பிறைச் சந்திரனும், அந்தக் கொம்பின் கிம்புரியைப் போலப் பாம்பு சுற்றிக் கிடப்பதென்றும், கொம்பு ஒடிக்குங்கால் உதிர்ந்த முத்தென்ன நெற்றிக்கண் விளக்குகிறது என்றும் கூறிய உவமையணி நயம் பாராட்டற்குரியது. இக் கருத்தடங்கிய பாசுரம்,

"செற்றுக் களிற்றுரி கொள்கின்ற ஞான்று
செருவெண் கொம் பொன்

நிற்றுக் கிடந்தது போலு மிளம்பிறை
பாம்பதனோச்
சுற்றிக் கிடந்தது கிம்புரி போலச்
சுடரிமைக்கும்
நெற்றிக்கண் மற்றதன் முத்தொக்கு
மாலொற்றி யூரனுக்கே''

என்னும் திருவொற்றியூர்த் திருவிருத்தமாகும். திருப்பழனம் திருவிருத்தத்திலும், திருவீழிமிழலைத் திருவிருத்தத்திலும் அடியேனைக் குறிக்கொள்க என்றும், நான் சட்ட நும்மை மறக்கினும் எம்மைக் குறிக் கொண்மினே என்றும் வருகின்றன. திருப்பழனம் பதிகத்தில் குறிக்கொள்வது என்பது குறிக் கொள்க என்னும் பொருள் தரும் துவ்வீற்று வியங்கோள். திருவீழி மிழலைப் பதிகத்தில் சட்ட என்பது சற்று என்னும் பொருளில் வந்தது. அது திருவாசகத்தில் சட்டோ என்று வழங்குகிறது. 'சட்டோ நினைக்க மனத்தமுதாஞ் சங்கரனை' என்பது திருவாசகம்.

திருப்பூந்துருத்தித் திருவிருத்தம் 'நானடி போற்றுவதே' என்று ஒவ்வொரு பாட்டிலும் முடிகிறது. திருநெய்த்தானம் 'உமையவளோடு நெய்த்தானத்து இருந்தவனே' என்று பெரும்பாலும் முடிகிறது. திருவையாறு திருவிருத்தத்தில் மூன்று பதிகங்கள் உள்ளன. அவற்றுள் ஒன்று இருபது பாசுரங்கள் உடையது. இன்னொன்று பத்தும் உடையது. முதலாவது பதிகம் தம்மைச் சமண சமயத்தில் செலுத்திச் சூலை நோயால் தடுத்தாட் கொண்ட வரலாறு கூறுகிறது.

திருவையாறு திருவிருத்தத்தில் இருபதும், ஒவ்வொன்றும் ஒவ்வோர் ஒப்பரிய பொருளை அடக்கினவாய் அடித்தலம் என்று முடிகிறது. அதில் ஏழாவது பாசுரம் சப்தஸ்தானத் திருவிழாவிற்கு வந்த சனக் கூட்டங்கள் அனைவர்க்கும் சோறு அளித்துப் பசி தவிர்த்து, ஆட்கொள்வதாகக் குறிப்பால் தெரிவிக்கிறது.

இதில் சில திருவிருத்தங்கள் காண்க, காண்க என்று தெரிவிக்கின்றது. அதன் பொருள் நீங்கள் இன்னும் கண்கூடாகக் காணலாம் என்பதாகும்.

உதாரணமாக ஒரு தலத்தில் வைகாசி மாதம் திருவிழா நடந்தது. நண்பகல். வெய்யோன் கிரணம் அக்கினி போலக் கொளுத்துகிறது. தேவாரம் பாடிவரும் ஓதுவா மூர்த்திகள் துள்ளித் துடிக்கின்றனர். இந்தச் சமயத்தில் ஒரு மூர்த்தி,

"சுழலார் துயர்வெயிற் சுட்டிடும் போதடித்
தொண்டர் துன்னும்''

என்ற திருப் பாசுரத்தைப் பாடத் தொடங்கினதுதான் பாக்கி, உடனே வெயில் எங்குக் கரந்ததோ? வெப்பம் எங்கு முடிந்ததோ? வெயிலை எல்லாம் மறைத்தது மேகம். சில்லென்ற காற்று வீசியது. தமிழ்மறையின் பெருமையை அனைவரும் கொண்டாடினர்.

அடுத்தது திருப்பாதிரிப்புலியூர்த் திருவிருத்தம் பன்முறை சிந்தித்து அறியத்தக்கது ஒரு கால் திருப்பாதிரிப்புலியூரில் ஞானியார் சுவாமிகள் தலைமையில் ஒரு சபை கூடிற்று. பேச்சின் மத்தியில் ஒரு அன்பர் வந்து திருநாவுக்கரசு நாயனுர் தமக்கு இவ்வளவு உபகாரம் செய்த தமக்கையாராகிய திலகவதியாரைப் பற்றி எங்கேனும் கூறியிருக்கின்ருரா? கூறவில்லையே அவரைப் போல் நன்றி கெட்டவர் வேறுண்டா என்று அஞ்சாது கூறினர். அனைவரும் அப்பர் தேவாரத்தில் திலகவதியாரைப் பற்றி எங்கும் கூறப்படவில்லையே யென்று விழித்தனர். உடனே அடிகளார் எழுந்து,

ஈன்றாளு மாயெனக் கெந்தையு மாயுடன்
தோன்றினராய்

என்று தொடங்கும் இத்தலத்துப் பதிகத்தைப் பார்த்திருக்கின்றீர்களா? உடன் தோன்றினர் என்பது திலகவதியாரைக் குறிக்க வில்லையா என்று அடிகள் விடை இறுத்தனர். அனைவரும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தனர்.

திருநல்லூர் திருவிருத்தம் 7-ஆம் பாசுரம் அமர்நீதி நாயனுர் வரலாறு குறிப்பது.

இனி ஒரு பாசுரத்தில் ஆற்றிற் கெடுத்துக் குளத்தினில் தேடுவது பயன் தராத காரியம் என்று குறிக்கப் பெற்றுள்ளது. இப் பழமொழியை மாருகச் செய்து பயன் எய்திய அற்புதம் நமது வன்ரெண்டப் பெருந்தகையார்க்கு மணிமுத்தா நதியிலும், திருவாரூர்க் கமலாலயக் குளத்திலும் நேர்ந்த நிகழ்ச்சியாம். ★

# ஆசிரியர் மெய்கண்டார்

**முன்னுரை :**

தமிழ் நாட்டில் தோன்றி யருளிய தலைசிறந்த சான்றோர்களின் வரிசையில் **ஆசிரியர் மெய்கண்டார்** மிகவும் குறிப்பிடத் தகுந்த பெருஞ் சிறப்பினை யுடையவர் ஆவர்!

ஆசிரியர் **திருவள்ளுவர்** இந் நாளில் உலகம் போற்றும் ஒப்புயர்வற்ற பெருஞ் சான்றோராக அறிஞர்கள் அனைவராலும் மதிக்கப் பெறும் மாட்சிமை பெற்றுத் திகழ்தல் போல, ஆசிரியர் **மெய்கண்டார்** தாமும் உலக அரங்கில் ஒப்புயர்வற்ற பெருஞ் சான்றோராக வைத்துப் போற்றத் தகுந்த பெரு நலத்திற்கு உரியவர் ஆவர்!

**தத்துவ நூற் பேராசிரியர் :**

உலகிற் சிறந்த தத்துவ நூற் பேராசிரியர்கள் யார் யார்? என வினவினால், **பிளாட்டோவுக்கும் (Plato)** முன்பு வாழ்ந்த பலரில் இருந்து தொடங்கி, இன்றுள்ள **பெர்ட்ரண்ட் ரஸ்ஸல் (Bertrand Russel)** வரையிலுள்ள அனைவரையும் பற்றி ஆங்கிலம் அறிந்த பெருமக்கள் மிகப் புகழ்ந்து வியந்து கூறுவர். ஆனால், நம் தமிழ் நாட்டில் தோன்றி வாழ்ந்திருந்த தமிழர் ஆகிய ஆசிரியர் மெய் கண்டார் பற்றியோ, அவர் இயற்றி யருளியுள்ள சிவஞான போதம் பற்றியோ, நம் தமிழ் நாட்டிலேயே பலருக்கு ஒன்றும் தெரிவதில்லை. இந் நிலை நம்மனோர் மிகவும் இரங்கி வருந்துவதற்குரிய செய்தியாகும். உலக முழுமைக்கும் உரிய தத்துவ நூற் பேராசிரியர்களுள் மெய் கண்டாரும் ஒருவராகற் பாலர் என்பது மிகையன்று.

**நூலாசிரியர்களுள் இரு வகை :**

நூலாசிரியர்கள் இருவகைப்படுவர். மனித நிலையில் மனித அறிவின் துணை கொண்டு, உலகியற் பொருள்களை அளவை முறையால் ஆராய்ந்துணர்ந்து, அவ்வாற்றால் நூல்களை இயற்றி யளிப்பார் ஒரு சிலர்! மனிதரே யாயினும், மனித நிலையின் மேம்பட்டுத் தெய்விக நிலையினை எய்திச் சிறந்து திகழ்ந்து, இறையருள் உணர்வின் துணைகொண்டு, வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவராய் முற்றுணர்வு கைவரப்பெற்று, உலக நலங் கருதி உயர்ந்த பொருளுண்மைகளை உள்ளவாறு உணர்ந்து நூலியற்றி யளிப்பவர்கள் வேறு சிலர்!

இவ் விரு திறத்தினர்களுள்ளும் முன்னையரினும் பின்னையரே, பல வகைகளில் முதன்மையும் சிறப்பும் மிக்கவர்கள் ஆவர்! ஆசிரியர் மெய் கண்டார் வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவராய்ப் பிறங்கிய இறையியல் ஞானப் பெருங் குரிசில்!

**ஞானச் செழுஞ்சுடர்**

ஆசிரியர் மெய்கண்டாரின் அருமை பெருமைகள் அளவிடற்பாலன அல்ல. அவைகள் "விரிப்பின் அகன்றும் தொகுப்பின் எஞ்சியும்" செல்லும்

மாட்சிமை சான்றன. திருநாவுக்கரசரையும் திருஞான சம்பந்தரையும் சேக்கிழார் சுவாமிகள் "**பொருட் சமய முதற் சைவ நெறி தான் பெற்ற புண்ணியக் கண் இரண்டு**" எனப் புகழ்ந்து போற்றினர். அந்நிலையிற் கூறலுறின், **தொல்காப்பியர் திருவள்ளுவர் மெய்கண்டார்** என்னும் மூவரையும் "செந்தமிழ் நாட்டின் தலை சிறந்த மூன்று ஞானச் செழுஞ்சுடர்கள்" எனப் புகழ்ந்து போற்றுதல் பொருந்தும்.

### திருக்குறளும் சிவஞான போதமும்

திருவள்ளுவர் பெருந்தகையைப் போலவே, மெய்கண்டார் பெருமானும் ஒப்புயர்வற்ற சிறந்த தெய்வப் புலவர்! திருக்குறள் போலவே, சிவஞான போதமும், ஓர் உலகப் பொதுமை நூலாக ஒளிர்தற்கு உரியது.

திருவள்ளுவர் இயற்றிய **திருக்குறள்** நீதி நூல்களின் வரிசையில் உலகப் புகழ் எய்தித் திகழ்தல் போன்றே, ஆசிரியர் மெய்கண்டார் இயற்றியருளியுள்ள **சிவஞான போதம்** என்னும் செந்தமிழ்த் திருநூலும் தத்துவ நூல்களுள் உலகில் தலை சிறந்த தொன்றுகப் போற்றிப் புகழ் தற்குரிய நிலையிற் பொலிகின்றது!

**அறம் பொருள் இன்பம்** என்னும் முப்பொருள்களைப் பற்றிய செய்திகளைத் திறம்பட விளக்குதலில் திருக்குறளைப் போன்ற நூல் வேறு பிறிது ஒன்றுமில்லை. அங்ஙனமே **பதி பசு பாசம்** என்னும் முப்பொருளின் இயல்புகளை எத் திறத்தவரும் இசைந்து உடன்பட்டு வியக்கத்தக்கவாறு விளக்கும் திறத்தில், சிவஞான போதம் போன்ற சிறந்த நூல் வேறு பிறிது எதுவும் இல்லை!

**கடவுள் உயிர் மலம் மாயை வினை வீடுபேறு** என்பனவற்றின் இயல்புகளை யெல்லாம் அளவையியல் பிழையாத அரிய ஆராய்ச்சி நெறி முறையில் தடை விடைகளால் ஐயம் அற விளக்கி நிற்கும் தனி முதற் பெரு நூல் ஆகிய சிவஞான போதம் போல்வதொரு சிறந்த நூலை, நாம் யாண்டும் காண்டல் அரிது. இதனைப் பலகாலும் முயன்று பயின்று இனிது கற்றுணர்ந்தவர்கள், இதன் அருமை பெருமைகளை வியவாமல் இருத்தல் இயலாது.

* **பேராசிரியர் மாக்ஸ் முல்லர்** அவர்கள் இந்திய வேதாந்த தத்துவ ஞானம் பற்றிப் பொதுவாக வியந்து கூறியிருக்கும் கருத்து, ஈண்டைக்கும் மிக மிகப் பொருந்துவதேயாகும். மேலை நாட்டறிஞர்களும் சாலவும் வியந்து போற்றத் தகுந்த முறையில், சிவஞான போதம் பலப்பல சிறந்த உண்மைகளைத் திட்ப நுட்பம் செறியச் செவ்விதின் விளக்குகின்றது.

### திருக்குறளினும் சுருக்கம்:

சுருங்கக் கூறி விளங்க வைத்தல் தமிழ் மொழிக்கே யுரிய தனிப்பெருஞ் சிறப்பியல்பு. திருக்குறள் அச்சிறப்பியல்பில் மிக மிகச் சிறந்து திகழ்கின்றது. அதனையும் கூட வெற்றி கொண்டு வீறு பெறும் நிலையில் சிவஞான போதம் மிக மிகச் சுருங்கச் சொல்லி விளங்க வைக்கும் மாட்சிமை மிக்கதாக வயங்குகின்றது.

---

* "It is surely astounding that such a system as the Vedantha should have been slowly elaborated by the indefatigable and intrepid thinkers of India, thousands of years ago, a system that even now makes us feel giddy, as in mounting the last steps of the swaying spire of an ancient Gothic Cathedral. None of our philosophers, not excepting **Herachitus, Plato, Kant,** or **Hegel,** has ventured to erect such a spire, never frightened by storms or lightnings..."

**—Prof. Max Muller, The Six Systems of Indian Philosophy p. 182**

இதன் கண் அமைந்துள்ள

| | |
|---|---|
| சூத்திரங்கள் | 12 |
| வரிகள் | 40 |
| சொற்கள் | 216 |
| எழுத்துக்கள் | 624 |
| வெண்பாக்கள் | 80 |

மட்டுமே யாகும். இவ்வாற்ருல் ஆசிரியர் மெய்கண்டார் பெருமான் இயற்றியருளிய சிவஞான போதம் போலச் சொற் சுருக்கியதொரு நூலும், அங்ஙனம் சுருங்கிய எல்லையிலேயே மிக விரிந்து ஆழ்ந்த பொருட் பரப்பெல்லாம் அகத் தடக்கியதொரு நூலும் இந்நிலவுலகத் துள்ள எந்த மொழியிலும் இல்லை என்பது திண்ணம். **அறிவு நூல்களின் முடிபை யெல்லாம் சிவஞான போதம் தன்னுள்ளே அடக்கிக் கொண்டு திகழ்கின்றது.**

**"சிறிய ஆடியிற் பெரியமால் வரைப்பொருள் செறிந்தாங்கு**
**அறிவு நூல்களின் முடிபெலாம் அகத்தடக் கியதோர்**
**நெறியின் நீடிய நிகழ்சிவ ஞானபோ தத்தைக்**
**குறிய தீந்தமி ழால்உரை குரவனைப் பணிவாம்"**
—கச்சியப்ப முனிவர்.

**மெய் கண்டார் நூலின் மேன்மை :**

வேதம் ஆகமம் திருமுறைகள் ஆகிய நூல்களின் முடிந்த முடிபாக - அரும் பெரும் சாருக (Quintessence)ச் சிவஞான போதம் திகழ்கின்றது. அதன் அருமை பெருமைகளைச் சான்ருேர்கள் பலவாறு புகழ்ந்து போற்றியுள்ளனர். வேதம் **பசு ;** ஆகமம் அப்பசுவின் **பால் ;** நால்வர் ஓதும்தமிழ் ஆகிய திருமுறைகள், பசுவின் பாலிற் கிடைக்கும் நறு **நெய் ;** சிவஞான போதமோ அந் நெய்யின் மிளிரும் உறு **சுவை** போன்றது.

**"வேதம் பசு; அதன்பால் மெய்ஆ கமம்; நால்வர்**
**ஓதும் தமிழ் அதனின் உள்ளுறுநெய்—போதமிகு**
**நெய்யின் உறுசுவையாம் ! நீள்வெண்ணெய் மெய்கண்டான்**
**செய்த தமிழ் நூலின் திறம் "**

**நமக்கு இனிய ஞானநூல்**

***சர். ஏ. டி. குவில்லர் கவுச்** என்னும் மேலை நாட்டுப் பேராசிரியர் ஒருவர், 'இவ்வுலகிலேயே தமக்கு மிகவும் பிடித்த இனிய சிறந்த நூல், **ஷேக்ஸ்பியர்** 2000 வரிகளுக்குள் சுருங்கிய நிலையில் மிகத் திறம்பட இயற்றியுள்ள புயல் என்னும் இன்பியல் நாடகமே' எனக் குறிப்பிடு கின்ருர். அதனை யொப்ப, நாமும் 'நமக்கு இவ்வுலகிலேயே மிக மிக இனிய சிறந்த நூல் சிவஞான போதம்' என்று கூறிப் பெருமிதம் கொண்டு மகிழலாம்.

**திருக்குறளுக்கு ஓர் ஒழிபியல் :**

திருவள்ளுவர் தமது திருக்குறளில் தனியே எடுத்து விளக்க முற்படாத **வீடு பேற்றியல்** பற்றிய ஆராய்ச்சியினைக் கிளந்தெடுத்துக் கொண்டு சிவஞான போதத்தின் மூலம் தெளிவுற விளக்கிய பெருமை, ஆசிரியர் மெய்கண்டார் பெரு மானுக்கே உரியது எனக் கூறலாம். இவ்வாற்ருல் ஒரு வகையில் **திருக் குறளிற்கு ஓர்ஒழிபியல் போலச் சிறந்து திகழ்வது சிவஞான போதம்** எனக் கூறுதலும் பொருந்தும்.

---

* "Were an angel greater than Ariel to wing down from heaven and stand and offer me to choose which of all the books written in the world, should be mine, I should choose —not the Odyssey, not the Aeneid, not the Divine Comedy ,not the Pardise Lost, not the Othello, nor the Hamlet nor the Lear ; but this little matter of 2000 lines, **The Tempest."**

**—Sir A.T. Quiller Couch**

**வரலாற்றுக் குறிப்பு :**

திருமுனைப்பாடி என்னும் நடு நாட்டில், **திருப்பெண்ணாகடம்** என்னும் சிவத்தலத்தில் **அச்சுத களப்பாளர்** என்னும் வேளாண் குலத்தலைவர் ஒருவர் வாழ்ந்து வந்தார். அவர் திருவெண்ணெய் நல்லூரில் இருந்த வேளாண் செல்வர் ஒருவரின் மகளை மணந்து கொண்டு இல்லறம் நடாத்தி வந்தார். அவருக்கு நெடுங் காலமாகப் பிள்ளைப்பேறு இல்லாமல் இருந்தது. அதனால் மிகவும் மனம் வருந்திய அச்சுத களப்பாளர் தமது குல குருவாகிய திருத்துறையூர்ச் சகலாகம பண்டிதர்பாற் சென்று, தமது குறை நீங்கும் வழியாது? என வினவினார். அவர் திருமுறையைப் பூசித்துக் கயிறு சார்த்திப் பார்த்தபோது,

**"பேய்அடையா பிரிவெய்தும் பிள்ளையினோடு உள்ளம் நினைவு**
**ஆயினவே வரம்பெறுவர் ஐயுறவேண்டா ஒன்றும்**
**வேயனதோள் உமைபங்கன் வெண்காட்டு முக்குளநீர்**
**தோய்வினையார் அவர்தம்மைத் தோயாவாம் தீவினையே"**

என்னும் திருஞான சம்பந்தர் தேவாரப் பாடல் கிடைத்தது. அதன்கண் "**பிள்ளையினோடு உள்ளம் நினைவு ஆயினவே வரம் பெறுவர். ஐயுற வேண்டா ஒன்றும்**" என அமைந்திருந்த பகுதி, அச்சுத களப்பாளருக்கு ஆறுதல் அளித்தது. அத்திருப்பாடல் குறித்துள்ளபடியே, அவர் **திருவெண்காடு** என்னும் சிவத்தலம் சென்று, அங்குள்ள சோம குளம், சூரிய குளம் அக்கினி குளம் என்னும் மூன்று குளங்களிலும் முறையே நீராடிச் சில காலம் அங்குத் தங்கி இறைவனை வழிபட்டார். இறையருளால் தோன்றிய சான்றோரே மெய்கண்டார் ஆவர். இவரது பிள்ளைத் திருநாமம் **சுவேதவனப் பெருமாள்** (திருவெண்காடர்) என்பது. பெண்ணாகடம், திருவெண்காடு, திருவெண்ணெய் நல்லூர் என்னும் மூன்று தலங்களும் அவருடைய வாழ்க்கையோடு தொடர்பு உடையன. எனினும், அவர் திருவெண்ணெய்நல்லூரோடு தான் மிகவும் தொடர்புடையவராய் வாழ்ந்திருந்தார் எனத் தெரிகின்றது.

**சுத்தாத்துவிதம் :**

**வாதராயணர்** எனப்படும் வேத வியாசர் இயற்றிய **பிரம்ம சூத்திரம்** என்னும் பெரு நூலுக்குச் சங்கரர் **கேவலாத்துவிதம்**, இராமாநுஜர் **விசிட்டாத்துவைதம்**, மத்வர் **துவைதம்** எனப் பல கொள்கைகளை வகுத்துப் பேருரைகள் இயற்றினராக, அவற்றின் வேருகச் **சுத்தாத்துவிதம்** என்னும் பொருளின் மெய்ம்மை கண்டு உணர்த்திய சிறப்புப் பற்றி இவருக்கு 'மெய்கண்டார்' எனப் பெயர் அமைந்தது. இதனைச் 'சத்திய ஞான தரிசினி' என வடமொழியில் வழங்குவர். **தாயுமான சுவாமிகள்,**

**"பொய்கண்டார் காணப் புனிதம்எனும் அத்துவித**
**மெய்கண்ட நாதன்அருள் மேவும்நாள் எந்நாளோ?"**

என ஆசிரியர் மெய்கண்டாரின் சிறப்பினைத் திறம் தெரிந்து பாராட்டியிருத்தல் காணலாம்.

**ஞான அருட் கதிரோன் :**

மெய்கண்டார் ஒரு பெரும் ஞான **சூரியன்.** அவர் தம் தோற்றத்தால், அன்பர்களின் இருதயம் ஆகிய **தாமரைகள்** விரிந்து மலர்கின்றன. பண்டை மறைகள் ஆகிய **வண்டுகள்** அத்தாமரை மலர்களில் இருந்து மிழற்றி ஒலித்து மகிழ்கின்றன. **சிவ மணமும் தமிழ் மணமும்** யாண்டும் பரவி **இன்புறுத்துகின்றன.**

"பண்டைமறை வண்டரற்றப் பசுந்தேன் ஞானம்
பரிந்தொழுகச் சிவகந்தம் பரந்து நாறக்
கண்டஇரு தயகமல முகைகள் எல்லாம்
கண்திறப்பக் காசினிமேல் வந்த அருட்
கதிரோன்
விண்டமலர்ப் பொழில்புடைசூழ் வெண்ணெய்
மேவும்
மெய்கண்ட தேவன்மிகு சைவ நாதன்
புண்டரிக மலர்தாழச் சிரத்தே வாழும்
பொற்பாதம் எப்போதும் போற்றல்
செய்வாம்!"

**மாணவர்கள் :**

ஆசிரியர் மெய்கண்டாரின் மாணவர்கள் நாற்பத்தொன்பதின்மர் என்பர். அவர்களுள் **சிவஞான சித்தியார்** இயற்றிய அருள்நந்தி சிவாசாரியர், **உண்மை விளக்கம்** அருளிய திருவதிகை மனவாசகம் கடந்தார். **துகளறு போதம்** பாடிய சீர்காழிச் சிற்றம்பல நாடிகள் முதலியவர்கள் குறிப்பிடத்தக்கவர் ஆவர்! திருவெண்ணெய் நல்லூருடையான் ஊருடைய பெருமாள் ஆன **எடுத்தது வலிய வேளார்** என்பவர் ஒருவர், தம் ஞானசிரியர் ஆகிய மெய்கண்டார் பெயரால், திருவண்ணமலைக்கு அருகில் உள்ள **மாத்தூர்** என்னும் இராசராசநல்லூரில் ஒரு புதிய ஏரி வெட்டியதும், அதன் கரையில் **மெய்கண்டீசுவரம்** என்னும் சிவாலயம் அமைத்ததும் ஆகிய செய்திகள், பின்வரும் கல்வெட்டு ஒன்றினல் தெரிகின்றன.

"ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவன சக்கரவர்த்திகள் ஸ்ரீ ராஜராஜ தேவர்க்கு யாண்டு 16ஆவது ரிஷப ஞாயிற்று 28 ஆம் தேதியும் சனிக்கிழமையும் பெற்ற மிருக சீரிஷத்து நாள் உடையார் திருவண்ணமலை யுடைய நாயனர் கோயில் ஸ்ரீ மாகேசுவரக் கங்காணி செய்வார்களும் தேவர் கன்மி கோயிற் கணக்கனும் **திருவெண்ணெய் நல்லூருடையான் மெய்கண்ட தேவன் ஊருடைய பெருமாளான எடுத்தது வலிய வேளார்க்குக்** கல்வெட்டிக் கொடுத்த பரிசாவது: இந்நாயனர் தேவதானம் செங்குன்ற நாட்டு மாத்தூரான இராச ராசநல்லூரில் இவர் வெட்டுவித்த **மெய்கண்ட தேவப் புத்தேரிக்குக்** கடமை யிறுக்குமிடத்துத் திருத்தின ஆண்டு குழி நாழியும் பாடிகாவலும் கொள்ளக் கடவதாகவும். இதன் எதிராமாண்டு கால் வரிசையும் பாடிகாவலும் இறுக்கக் கடவதாகவும், இதன் எதிராமாண்டு முதல் காலே யரைக் கால் வரிசையும் பாடிகாவலும் முற்படவேலி எண்பதின் கலம் இறுக்கக் கடவதாகவும். இவ் வேந்தலுக்கு எல்லை அரசுக்குக் கிழக்கு நீரேறின நிலம் திருத்திப் பயிர் செய்யக் கடவவதாகவும். இவ் வேந்தலுக்குப் புஞ்சை நிலம் அரசுக்குக் கிழக்கு, திருக்கோவலூர்ப் பெரு வழிக்கு வடக்கு. இவ் வேந்தலைச் சூழ்ந்த நிலத்திலே ஐந்து வேலித் தரை எல்லையாய்ப் பண்டாரத்துக்குக் கடமை யிறுக்கக் கடவதாகவும். இவ் வேந்தலில் திருத்தப்பட்ட நிலத்திலே இவ்விராசராச நல்லூரில் எழுந்தருளுவிக்கிற உடையார் **மெய்கண்டீசுவரம் உடைய நாயனர்க்குப்** பூசைக்கும் அமுது படிக்கும் மூன்றில் ஒன்று தேவதானமாவதாகவும். இவ் வேரிக்கு ஏரிப்பட்டி மன்ருட்டுப் பட்டியுமாக 500 குழி விடக் கடவதாகவும். இவ் வேந்தல் தம் பொருள் இட்டு வெட்டுகிற நிலம் இவ்வேரியும் நிலமும் குடி நீங்காத் தேவதானமாய் இவர்க்குச் சந்திராதித்தர்

வரையும் காணியாய் விற்றெற்றிப் பரிக்கிரகஞ் செல்லக் கடவதாகவும். இப்படிச் சம்மதித்துக் கல்வெட்டிக் கொடுத்தோம் இவ்வனைவோம். இது பன்மாகேசுவர ரட்சை."

**கல்வெட்டும், காலமும்:**

இக் கல்வெட்டினைத் துணையாகக் கொண்டு, அறிஞர் திரு. *T. A.* **கோபிநாத ராவ்** அவர்கள், ஆசிரியர் மெய்கண்டார் இரண்டாம் இராசராச தேவர் (கி. பி. 1216—1246) காலத்தில் வாழ்ந்திருந்தவர் ஆதல் வேண்டும் என்றும், இக் கல்வெட்டுத் தோன்றிய காலம் உத்தேசமாகக் கி. பி. 1232 எனக் கூறலாம் என்றும் கருதுகின்றூர்கள். மெய்கண்டான் யாண்டு ஐப்பசியில் தொடங்குவதாகவும், தொடக்கம் கி. பி. 1222-இல் நிகழ்ந்ததாகவும் கொள்ளும் வழக்கம் ஒன்றும் உள்ளது. அதன்படி ஆசிரியர் மெய்கண்டார் இற்றைக்குச் சற்றேறக் குறைய 740 ஆண்டுகளுக்கு முற்பட்டிருந்தார் என நாம் கொள்ளுதல் கூடும்.

—★—



திருவெண்காடு ஸ்ரீ சுவேதாரண்ய ஈசுவரர் கோயிலில்
அறநிலைய அமைச்சர் திரு. M. பக்தவத்சலம், B.A., B.L., அவர்கள்
28-4-63 அன்று யாத்ரீகர் விடுதிக்கு அடிக்கல் நாட்டுதல்.

# சங்கர நாராயணர்

திரு. கே. ஆர். இராஜகோபாலன், B.Sc. (Hons.),
தாம்பரம்.

நம் இந்து சமுதாயத்தின் இரு கண்கள் சைவமும் வைஷ்ணவமும் ஆகும். வெகு காலத்திலிருந்தே நாம் சிவனையும், திருமாலையும், அரியையும், அரனையும் வழிபட்டு வந்துள்ளோம் என்பது யாவரும் அறிந்ததே. பிற் காலத்தே இரு சாராருக்கும் இடையே வேற்றுமை தோன்றி, வேறுபாடுகளையே பெரிதாக்கிச் சண்டைகளைப் பெருக்கிச் சைவர்களுக்கும் வைஷ்ணவர்களுக்கும் உள்ள ஒற்றுமைகளைக் கவனிக்காமலேயே போகுமாறு காரியங்கள் நடந்து வந்தன. இச்சண்டைகளுக்கும் இடையேகூட, நம் நாட்டு அரசர்களும் குறுநில மன்னர் முதலிய பெருமக்களும் இரு தெய்வங்களையும் வழிபடுவதற்காகக் கோயில்களைக் கட்டி, அழகிய சிற்பங்களையும் மண்டபங்களையும் அமைத்துக் கோயில்களில் பூசை முதலியவைகள் சரிவர நடப்பதற்கு மான்யம் அளித்துப் பேணி வந்தார்கள். இவைகள் நம் நாட்டில் உள்ளது போல், வேறெந்த நாட்டிலேயும் இல்லையென்று துணிந்து கூறலாம்.

நம் மதத்திற்கும் பிற மதங்களுக்கும் உள்ள ஒரு முக்கிய வேறுபாடு இதுதான். அவர்களுக்கு ஒரே தெய்வம், நமக்குப் பல தெய்வங்கள், பல மூர்த்தங்கள் ஆயினும், ஒரே கடவுளைத்தான் நாம் பல்வேறு திருவுருவங்களில் வைத்து, பலவேறு பெயர்களால் வழிபட்டு வருகின்றோம் இது இந்து மதத்தின் சிறப்பு. கூர்ந்து நோக்கின் இந்த உண்மை நன்கு புலப்படும். நாம் கோயிலுக்குச் செல்கிறோம். தூரத்தே கோயிலின் கோபுரத்தைத் தரிசித்து அது இறைவனின் உறைவிடம் என்று அங்கேயே அஞ்சலி செலுத்துகிறோம். பிறகு கோபுர வாயிலைக் கடந்து முதலாக விநாயகரை வணங்குகிறோம். அப்படியே அம்மையார் சன்னிதியிலும் நடராசர், சுப்பிரமண்யர் சன்னிதிகளிலும் நம் வழிபாட்டை நடத்துகிறோம். உருவ அமைப்பில்லா லிங்க வடிவமாயினும் சரி, ஒவ்வோர் அங்கமும் அழகும், நிறைவும் பெறத் தேர்ந்த ஸ்தபதியினால் வியக்கத்தக்க முறையில் அமைந்த நடராஜப் பெருமானின் அன்பு வடிவமாயினும் சரி—கடவுள் என்று வழிபட்டு இன்புறும் மனப்பான்மை நமக்குத்தான் உண்டு. நாம் பல உருவங்களிலும் பலவித நிலைகளிலும் காணுவது ஒரே கடவுளின் பல அம்சங்கள், பல தோற்றங்கள் அவ்வளவுதான்.

ஒரே முதற் கடவுளின் பல வேலைகளுக்கொப்ப அவரைப் பிரமன், சிவன், விஷ்ணு என்று அழைக்கிறோம். பிரம்மாவின் வழிபாடு-கோயில் கட்டி வழிபடும் முறை—அதிகம் இல்லை என்றே சொல்ல வேண்டும்.

அஜ்மீரிலுள்ள புஷ்கரம் என்னும் ஊரில் பிரம்மாவிற்குத் தனிக் கோயிலும் வழிபாடும் இன்றும் இருந்து வருவதாகும். ஆந்திர தேசத்தில் துங்கபத்திரையும் கிருஷ்ணா நதியும் கூடும் இடத்தினருகே ஆலம்பூர் என்னும் ஊர் உளது. அங்குப் பழமை வாய்ந்த ஒன்பது பிரம்மாக்களின் கோயில் உள்ளது.

பிரம்மா, விஷ்ணு, சிவன் மூவரையும் ஒருங்கே தன்னுள் இருத்திய "தாணுமால் அயன்" கோயில், கேரளத்தில் சுசீந்திரம் என்னும் ஊரில் உள்ளது.

சிவனுக்காவது விஷ்ணுக்காவது கோயில்கள் இல்லாத ஊரே இல்லை என்றே சொல்ல வேண்டும். "கோயிலில்லா ஊரில் குடியிருக்க வேண்டாம்" என்று அவ்வைப் பிராட்டி கூறியுள்ளார்கள். இப்பொழுது நகரங்கள் பெரிதாக வளர்ந்து வருவதால் ஒரே நகரத்திலேயே பற்பல பகுதிகளில் கோயில்கள் அமைந்துள்ளதைப் பார்க்கிறோம். ஒரே சுற்றுச் சுவர்க்குள் (பிராகாரம்) சிவவிஷ்ணு இருவருக்கும் கோயில்

கள் அமைத்து வழிபடும் முறை சாலச் சிறந்த தாகும், போற்றத்தக்கதும்கூட. பண்டைய காலக் கோயில்களிலும் இம்மாதிரி வழிபடும் முறை இருந்தது என்பதனை நாம் அறிவோம். பற்பல சிவாலயங்களில் ஏதாவதொரு திரு மாலின் மூர்த்திக்குச் சன்னிதி உள்ளதை நாம் கண்கூடாகக் காண்கிறோம். விஷ்ணு ஆலயங் களிலேயும் பிள்ளையார்க்கென்றே தனிக் கோயி லும் வழிபாடும் அமைந்துள்ளதையும் நம்மில் பலர் அறிவார்.

இவ்வித சமரச நோக்குகளுக்கெல்லாம் முத்தாய்ப்பு வைத்ததுபோன்ற கற்பனைதான் சங்கரநாராயணரின் திருவுருவம். ஒரு முதற் கடவுளின் இருகூறுகளான விஷ்ணுவையும், சிவனையும் ஒருங்கே ஒரே உருவில் அமைத்து வியந்து, உகந்து வழிபடும் கற்பனைத் திறனை ஆய்ந்தாய்ந்து நோக்கி இன்புற வேண்டும்! இன் இம்மாதிரியான மூர்த்திகளுக்கென்றே ஏற்பட்ட கோயில்களைப்பற்றிச் சற்று விரிவாகக் கூறுவோம்.

மைசூர் ராஜ்ஜியத்தில் துங்கபத்திரை ஆற் றங்கரையில் அரிஹரர் என்ற ஊர் உண்டு. அங்கு அரிஹரேசுவரர் ஆலயம் உள்ளது. வலப் பாகத்தில் அரன் வடிவமாயும் இடப்பாகத்தில் அரியின் வடிவமாயும் துலங்கும் தெய்வத்தின் அழகைக் கண்டுதான் இன்புற வேண்டும். கோயிலின் அமைப்பும் சுற்றுப்புறச் சூழ்நிலை யும் மிக நேர்த்தியாக உள்ளன.

திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள சங்கர நயி னார் கோவிலை நம்மில் பலர் அறிவார்கள். தென் காசியிலிருந்து 20 கல் தொலைவிலுள்ள ரயில் நிலையம்தான் ஊர். பார்வதி தேவி திருமாலின் தங்கை, அவளுக்கு நாராயணி என்ற பெயர் உண்டு. திருமால் தன் தங்கையை மதுரையில் சுந்தரேசுவரருக்குக் கலியாணம் செய்விக்கும் அழகையும், சமரச நோக்கையும் நாம் அறிந்து வியக்கிறோம். இறைவிக்கு ஒரு பாகம் அளித்து அம்மையப்பர் என்று சிறப்புப் பெற்ற பரமன், திருமாலுக்கு ஒரு புறம் அளித்து இங்குச் சங்கர நாராயணர் ஆகக் காட்சியளிக்கிறார். தேவி யார், தன் கணவனை "உமது திருவுடலில் நாராயணர் வடிவத்தைக் காண வேண்டும்" என வேண்ட, அதற்கிசைந்து ஆடி மாதத்தில் பௌர்ணமி அன்று தன் இடது பாகத்தில் நாரா யண வடிவம் கொண்டு, புன்னை வனத்தில் தவம் செய்துகொண்டிருந்த அம்மையாருக்குக் காட்சி தந்ததாக அமைந்தது இத்தலம். இன்று இச் சங்கரநாராயணத் திருவுருவம் சங்கரலிங் கப் பெருமானுக்கும், கோமதி அம்மைக்கும் நடுவே இன்புற வீற்றுள்ளது. இக்காட்சியினை விளக்கும் திருவிழாவும் ஆண்டுதோறும் ஆடிப் பௌர்ணமி அன்று சிறப்பாக இன்றும் நடை பெற்று வருகிறது.

இக்கோயிலிலுள்ள கல்வெட்டு ஒன்றினால் கி.பி. 1022-ல் மதுரைப் பாண்டிய அரசர் உக் கிரராம பாண்டியனால் இக்கோயிலுக்குத் திருப்பணிகள் நடந்தமை அறிகிறோம். கோயி லின் தொன்மையையும் அறிகிறோம். பிறகு கி.பி. 1172-ல் வாழ்ந்த சீவலப் பாண்டியர் என் பவரால் இக்கோயிலின் தல புராணம் பாடப் பெற்றது. அத் தலபுராணத்தின் கண்,

"எறிதிரைக் கங்கை யாறு உவட்டெடுக்கும்
ஈர்ஞ்சடை ஒருபுடை இலங்கச்
செறிகதிர் பரப்பும் மணிமுடி ஒருபாற்
சேட்டிளம் பரிதியில் திகழப்
பொறிவரி யரவக் கொடுங்குழை ஒருபாற்
பொலிதரப் புதுவெயிற் கற்றை
நிறைதரும் மகர குண்டலம் ஒருபால்
நீடிருள் பருகுப் நிலவ"

"கடல்விளை பவளச் சடையின்மேற் கிடந்த
கலைமதிக் குழவிவிட் டெறிக்கும்
நெடுநிலாக் கற்றை தவழ்வது போல
நீற்றணி ஒருபுடை நிலவப்
படரொளி பரப்பும் பசும்பொனின் மௌலிப்
பருமணி கொழித்திடும் நிலவிற்
சுடர்தவழ்ந் தென்னத் தேங்கமழ் நானத்
திலதமோர் புடையினில் துலங்க"

என வரும் அழகிய இனிய செய்யுட்களில், சங் கர நாராயணத் திருவுருவின் இயல்பு நன் கெடுத்து நுவலப் பெற்றிருத்தல் காணலாம். அத் திருவுருவின் ஒரு பாதியில் கங்கையைத் தரித்த சடைமுடியும், நாககுண்டலமும், சந் திரனின் நிலவு ஒளி போன்ற விபூதியும், மழு வாயுதமும், சர்ப்பாபரணமும், கொன்றைமாலை

யும், புலித்தோலும், சர்ப்பமாகிய வீரக்கழலும் துலங்குகின்றன. மற்றொரு பாகத்தில் இரத்தின கிரீடமும், மகரகுண்டலமும், இரத்தின கிரீடத்தின் நீலமணியினொளி போன்ற கஸ்தூரிப் பொட்டும், சக்கிராயுதமும், பொற்பூணூலும், துளவமாலையும், பீதாம்பரமும், பொன்னாலாகிய வீரக்கழலும், பிரகாசிக்கின்றன. இவ்வாறு சங்கர நாராயணர் அழகிய காட்சி யளித்தருள் கின்றார்.

மற்றும் திருவிதாங்கூரில் நாவாய்க்குளம் என்னும் ஊரில் ஒரு சங்கர நாராயணசுவாமி கோயில் உள்ளது என்று அறிகிறோம்.

ஜோத்பூருக்கு அருகே உள்ள ஓசியா (Osia) என்னும் இடத்திலுள்ள சூரியன் கோயிலில் ஒரு அற்புதமான அரிஹர சிற்பம் வெளிச் சுவரில் அமைந்துள்ளது. ஒரு கையில் திரிசூலமும் மற்றொரு கையில் ஆழியும் தாங்கி மிகுந்த கம்பீரத்துடனும், தெய்வீகப் பொலிவுடனும், நமக்குக் காட்சியளிக்கிறார் கடவுள். மற்றும் நம் நாட்டைச் சேர்ந்த கோயில்களில் பலவற்றிலும், குறிப்பாகக் கங்கைகொண்ட சோழபுரத்திலும் அரிஹர வடிவத்தினை நாம் காணலாம்.

சங்கர நாராயணத் திருவுருவின் சிறப்பு மிகத் தொன்னெடுங் காலமுதல் தமிழகத்தில் போற்றப்பெற்று வந்துள்ளது. இதனைப் பின் வரும் அழகிய திருப்பாடல்கள் அறிவுறுத்தி நிற்றல் காணலாம்.

“பொன்திகழும் மேனிப் புரிசடையம்
புண்ணியனும்
நின்றுலகம் தாய நெடுமாலும்—என்றும்
இருவர் அங்கத் தால்திரிவ ரேனும், ஒருவன்
ஒருவன் அங்கத் தென்றும் உளன்”

“அரன்நா ரணன்நாமம்; ஆன்விடை புள்ளூர்தி
உரைநூல் மறை; உறையும் கோயில்
—வரைநீர்;
கருமம் அழிப்பு அளிப்பு; கையதுவேல் நேமி;
உருவம்எரி கார்மேனி ஒன்று”

—பொய்கையாழ்வார்

தாழ்சடையும் நீண்முடியும் ஒண்மழுவும்
சக்கரமும்
சூழ்அரவும் பொன்நாணும் தோன்றுமால் - சூழும்
திரண்டருவி பாயும் திருமலைமேல் எந்தைக்கு
இரண்டுருவும் ஒன்றாய் இசைந்து

—பேயாழ்வார்

“எரியலால் உருவம் இல்லை
ஏறலால் ஏறல் இல்லை
கரியலாற் போர்வை யில்லை
காண்தகு சோதி யார்க்குப்
பிரிவிலா அமரர் கூடிப்
பெருந்தகை பிரான்என் றேத்தும்
அரியலால் தேவி இல்லை
ஐயன்ஐ யாற னார்க்கே”

—திருநாவுக்கரசர்

மின்போலும் செஞ்சடையான் மாலோடும்
ஈண்டிசைந்தால்
என்போலும் காண்பார்கட்கு என்றிரேல்,
—தன்போலும்
பொற்குன்றும் நீலமணிக் குன்றும் தாமுடனே
நிற்கின்ற போலும் நெடிது”

—காரைக்கால் அம்மையார்

இத்தகைய திருப்பாடல்களையும் அவற்றின் அரிய பொருள் நலங்களையும் உன்னி யுன்னி உணருந்தோறும், சங்கர நாராயணத் திருவுருவின் சிறப்புகளை நாம் அறிந்துகொள்ளப் பெறுவதுடன், நம்மிடையே சைவ வைணவ ஒற்றுமையும் சமரச மனப்பான்மையும் வளர்ந்தோங்கும் வாய்ப்புக்கள் ஏற்படுகின்றன. நம் இந்து சமயமும் சமுதாயமும் இதனாற் பல நலங்களை எய்தும் என்பது திண்ணம்.

[தமிழ்நாட்டிற் சைவ வைணவ ஒற்றுமையும், சமரச மனப்பான்மையும் மிகப் பழைய சங்க காலந் தொட்டே நின்று நிலவி வந்துள்ளன.

மதுரைக் கண்ணத்தனார் என்னும் சங்க காலப் புலவர் ஒருவர், மாலைக் காலத்தின் இயற்கை மாட்சியினைப் பாடத் தலைப்படுகின்றார். மாலைக் காலத்தின் அந்திப் பொழுதில் செம்பொன்னை உருக்கி வார்த்தாற் போலச் சிவந்து விளங்கும் செக்கர் வானம், ஒரு புறம்

அவர் தம் மனத்தினை மிகவும் மகிழ்விக்கின்றது. பிறிதொரு புறத்தே நீல நிறம் வாய்ந்த அழகிய கடற்காட்சி, அவர்தம் உள்ளத் துணர்வைக் கொள்ளை கொள்ளுகின்றது.

அப் புலவர் பெருமான் தம்மையும் மறந்து அவ்வியற்கைக் காட்சியில் ஈடுபட்டு இன்புறுகிறார்! அம்மட்டோ! முழுமுதற் பரம்பொருளின் இயல்பினையே, அவ்வியற்கைக் காட்சியின் மூலம் அவர் நினைவு கூர்கின்றார்.

செக்கர்வானம் **'செம்மேனி எம்மான்'** ஆகிய சிவபிரானையும், நீல நிறக்கடல் **'நீல மேனி நெடியோன்'** ஆகிய திருமாலையும் அவர்க்கு ஒருங்கே நினைவூட்டுகின்றன.

செக்கர்வானமும், நீலக்கடலும் ஒருங்கே இணைந்து விளங்கும் இனிய மாலைக் காலத்தை, **மதுரைக் கண்ணத்தனார்** என்னும் சங்க காலப் புலவர் பெருந்தகை, வலப்பாதி வடிவில் சிவபிரானும் இடப்பாதி வடிவில் திருமாலும் ஒருங்கே சேர்ந்து ஒருருவமாகத் திகழ்ந்தொளிரும் சங்கர நாராயண மூர்த்தம் போல உள்ளது என இற்றைக்குச் சற்றேக் குறைய 2000 ஆண்டுகளுக்கு முன்னரே புகழ்ந்து பாடிச் சென்றுள்ளார்!

**"வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடல்அணி கொளாஅ
வந்த மாலை ..."**

—அகநானூறு, 360

என்று அச் சங்க காலப் புலவர் பெருந்தகை பாடியிருப்பது, பன்னெடுங் காலமாகத் தமிழகத்தில் நிலவிவரும் சைவ வைணவ சமய ஒற்றுமைக்கும், சமரச ஞான மனப்பான்மை நலத்திற்கும் சிறந்த இனிய எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றது எனத் துணிந்து கூறலாம்.]

— ஆசிரியர்

## இறைபணியாளர் மாற்றங்கள்

திரு. T. N. **பாஸ்கரன்,** ஸ்ரீரங்கம் ஸ்ரீ ரங்கநாத சுவாமி கோயிலுக்கு மாற்றம்
திரு. P. K. **வைத்தியநாதன்,** நாச்சியார் கோயில் ஸ்ரீ சீனிவாசப் பெருமாள் கோயிலுக்கு மாற்றம்
திரு. **என். சீனிவாசன், B.A.,B.L.** தஞ்சை அரண்மனைத் தேவஸ்தானத்திற்கு மாற்றம்
திரு. S. **சோமசுந்தரம்,** தொட்டியம் ஸ்ரீ வேதநாராயணப் பெருமாள் அனலாடீஸ்வரர் கோயிலுக்கு மாற்றம்
திரு. D. V. **சுப்பையா,** காஞ்சிபுரம் குமரக் கோட்டம் ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி கோயிலுக்கு மாற்றம்
திரு. K. C. **கோவிந்தராஜுலு,** சோளிங்கபுரம் ஸ்ரீ லட்சுமி நாராயணப் பெருமாள் கோயிலுக்கு மாற்றம்
திரு. S. **ஜெகதீசன்,** திருப்பாதிரிப்புலியூர் ஸ்ரீ பாடலேசுவரர் கோயிலுக்கு மாற்றம்
திரு. A. **சுவாமிநாதன்,** சென்னை மாதவப் பெருமாள் கோயிலுக்கு மாற்றம்
திரு. **எஸ். வெங்கடாசலம், B. A.,** சிறுபுலியூர் ஸ்ரீ கிருபாசமுத்திரப் பெருமாள் கோயிலுக்கு மாற்றம்
திரு. P. **முத்துசாமி,** திருச்செங்காட்டங்குடி ஸ்ரீ ருத்திராபதி ஈசுவரர் கோயிலுக்கு மாற்றம்

**டாக்கர் சத்திரம்:** ஸ்ரீ காசிவிசுவநாதர் கோயில் பிரம்மோற்சவம்
**விச்சூர்:** பரப்பிரம்ம யோக ஞான ஆலயத்தில் சித்திரா பௌர்ணமி மகோற்சவம்
**வேதாரண்யம்:** ஸ்ரீ வேதாரண்யேஸ்வர சுவாமி தேவஸ்தானத்தில் ஸ்ரீ அகஸ்தியர் தரிசனத் [திருக் கல்யாண வைபவம்
**திருவொற்றியூர்:** ஸ்ரீ வன்மீகநாத சுவாமி கோயில் சைத்ரோற்சவம்
**எட்டியவயல்:** ஸ்ரீ பால சுப்பிரமணிய ஸ்வாமி கோயில் பிரம்மோற்சவம்
**இலஞ்சி:** திரு இலஞ்சிக் குமாரசுவாமி கோயிலில் சித்திரைப் பெருந்திருவிழா
**திருக்குடந்தை:** ஸ்ரீ சாரங்கபாணி சுவாமி கோயிலில் சித்திரை விழா
**சீர்காழி:** ஸ்ரீ சட்டைநாதசுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்
**திருக்கடவூர்:** ஸ்ரீ அமிர்தகடேசுவர சுவாமி கோயிலில் சைத்ர மகோற்சவம்
**சிறுவாச்சூர்:** ஸ்ரீ மதுர காளியம்மன் கோயிலில் பிரம்மோற்சவம்

# திருவாசகமும் பழமொழிகளும்

### பழமொழிகள் :

ஒரு மொழிக்கு அழகும் ஆற்றலும் வலிவும் அளிக்க வல்ல செல்வமாவன பலவற்றுள், அம் மொழிக்கண் வழங்கும் பழமொழிகள் மிகவும் சிறப்புடையன வாகும். பழமொழிகளை 'அறிவுத் துணுக்குகள்' எனலாம். பழமொழிகள் என்பன, நம் முன்னோர்கள் தம் வாழ்க்கையிற் பலகால் கண்டுணர்ந்து தெளிந்த அனுபவ உண்மைகளைப் பின்னோர்க்குப் பயன்பட நன்கினிது தொகுத்து வைத்துச் செல்லும் அறிவுப் பெட்டகங்கள் போல்வனவாம். அறிஞர்கள் பலர் கூடி ஆராய்ந்து விவாதித்து முடிவுசெய்து உணர்த்தத் தகும் அரியபல உண்மைகளை எளிதில் தெற்றென விளக்குவன பழமொழிகளே. காலத்தின் இலச்சினையும், பலகோடிமக்களின் ஒப்புதலும் போற்றுதலும் பெற்று, வழி வழியே தொடர்ந்து பலப்பல நூற்றுண்டுகளாக நிலவி நின்றுலவி வழங்கிவரும் பழமொழிகளின் அறிவனுபவ நலங்கள் பெரிதும் மதிக்கற் பாலன வாகும்.

*பழமொழிகள் அறிவின் இலக்கியங்கள் எனத்தக்கவை. அவைகள் உயர்ந்த உண்மைகளை உள்ளுறையாகக் கொண்டு ஒளிர்கின்றன. ஒவ்வொரு நாட்டிற்கும் உரிய நூல்களைப் போல, ஒவ்வொரு நாட்டின் பழக்க வழக்கப் பண்பாடுகளின் புனிதப் பாதுகாப்பு நிலையமாகத் திகழ்வன பழமொழிகளே.

ஒரு நாட்டின் அறிவுத்திறன் நுண்ணுணர்வு இயல்புணர்ச்சி ஆகியவைகள், அந்நாட்டுப் பழமொழிகளின் மூலம் வெளிப்படுகின்றன.

எளிய சொற்கள், குறுகிய நீதிகள், அனுபவ உண்மைகள், பழைய வழக்காறுகள் என்பனவே, ஓராற்ருல் உலகத்தினைத் தலைவர்கள் போல் இயக்கி வருகின்றன. ஒரு தனி மனிதனுடையவும், ஒரு நாட்டினுடையவும், பண்பாடுகளை உருவாக்கி, நடை முறைகளை வகுத்து இயங்கச்செய்யும் சிறந்த பேராற்றல், பழமொழிகளுக் குள்ளேயே மறைந்து கிடக்கின்றது.

சமுதாயத்தில் நிகழும் பெரிய சீர் திருத்தங்கள், பெரிய புரட்சிகள், மனித வாழ்வில் ஏற்படும் முன்னேற்றங்கள், வளர்ச்சிகள் என்பன பலவும், பொருத்தமான சூழ்நிலையில் வெளியிடப் பெறும் நல்ல சொற்கள்—திருந்திய சொற்கள்— ஆற்றல் மிக்க சொற்களின் வாயிலாகவே தொடக்கம் கொள்கின்றன. பறவைகள் தம் சேக்கைகளிற் சென்று சேர்ந்து வைகுவது போல, அச்சொற்களும் மனித உள்ளங்களில் எளிதே இனிது நுழைந்து நிலைபெற்று விடுகின்றன.

### பாடல்களிற் பழமொழிகள் :

எனவே, பழமொழிகள் மொழித்துறையில் மிகவும் இன்றி யமையாதனவாய்ச் சிறப்பிடம்

---

* 1. "Proverbs are the literature of reason, or the statements of absolute truths, without qualification. Like the sacred books of each nation, they are the sanctuary of its institutions"

—Emerson.

2. "The genius, wit and spirit of a nation are discovered in its proverbs."

—Bacon.

3. " Simple words, short maxims, homely truths, old sayings, are the masters of the world. In them is the hiding of the power that forms the character, controls conduct and makes individuals and nations what they are. Great reformations, great revolutions in society, great areas in human progress and improvement, start from good words, right words, sound words, spoken in the fitting time, and finding their way to human hearts as easily as the birds find thir homes."

—D. March.

பெற்றுத் திகழ்கின்றன். அவைகள் பாட்டும் உரையும் என்னும் இருதிறத்தி னுள்ளும் ஏற்ற பெற்றி விரவி வந்து, இலக்கியங்களுக்கு எழிலும் இனிமையும் நல்குகின்றன. ஒரு கருத்தினை வாளா கூறுதலினும், ஒரு பழமொழியுடன் இயைத்துக் கூறுதல், அக் கருத்தினைத் தெளிவும் வலிவும் சுவையும் உடையதாக்கி, அதனைக் கேட்போர் உள்ளத்திற் ''பசுமரத்து ஆணி அறைந்தாற் போல'' நன்கினிது பதிய வைக்கின்றது.

பாடல்களின் இடையிடையே பழமொழிகள் பயின்று வரின், அஃது அப்பாடல்களுக்கு ஓர் அரிய அழகையும் ஒருபுதிய ஆற்றலையும் தோற்றுவித்தல் காணலாம். ஒரு செய்தியையோ கருத்தினையோ கவிஞர் வறிதே புற்கெனப் பாடாமல், அதனை ஒரு பழமொழியோடு பொருத்தி எவ்வாற்றலாயினும் இயைத்துப் பாடுவராயின், அப்பழமொழியால் அக் கவிதை ஒரு புதியபொலிவையும் சுவையையும் அடைகின்றது. ஆசிரியர் நச்சினார்க்கினியர்,



மாணிக்கவாசகர்

தொல்காப்பியச் செய்யுளியல் உரையில் எடுத்துக் காட்டும் பின்வரும் செய்யுள் இவ்வுண்மையைச் செவ்விதின் உணர்த்தும்.

**பழமொழிகளின் சுவைபெருக்கும் பண்பு:**

'ஒரு தலைவி ஒரு தலைவனைக்கண்டாள். அவன்பாற் காதல் கொண்டாள். காதல் மிகுதியால் அவள் பெரிதும் நலிவுற்றாள். அவளுடைய தோள்கள் பசலைநிறம் அடைந்து அழகிழந்து மெலிவுற்றன'. இதனைப் பாட விரும்புகின்றார் ஒரு கவிஞர். இச் செய்தியை அல்லது கருத்தை இம் முறையிலேயே பாடிவிடின், அதனை ஓர் இனிய கவிதையாக எவரும் மதியார். எனவே, கவிஞர் ஒரு பழமொழியை நினைவு கூர்ந்து, அதனோடு இதனை இயைத்து அழகும் சுவையும் அமையப்பாடுகின்றார். ''உளுத்தங் கொல்லையை ஊர்க்கன்று மேயக் கழுதையைப் பிடித்துக் காதையறுப்பது

போல" என்பது ஒரு பழமொழி. அதனை இங்குக் கவிஞர் எடுத்துக் கையாளுகின்றார். தலைவனைக் கண்டவை தலைவியின் கண்களே! அக் கண்கள் செய்த பிழையினால், மிகவும் மெலிந்து பசலையடைந்து தலைவியின் தோள்கள் துயரம் உறுகின்றன. இஃது, 'உளுத்தங் கொல்லையை ஊர்க்கன்று மேய்ந்து செல்ல, ஒரு குற்றமும் செய்யாத கழுதையைப் பிடித்துக் காதை யறுப்பது போலப் பொருந்தாத நிலையில் உள்ளது' என்னும் கருத்தை யமைத்துப் பாடுகின்றார் கவிஞர்!

"உழுத உழுத்தஞ்செய் ஊர்க்கன்று மேயக்
கழுதை செவியரிந் தற்றால்,—வழுதியைக்
கண்டன கண்கள் இருப்பப் பெரும்பணைத்தோள்
கொண்டன மன்னோ பசப்பு"

எனவரும் இத்தொல்காப்பியச் செய்யுளியலுரை மேற்கோட் பாடலால், பாடல்களிற் பழமொழிகள் இடையிடையே பயின்று வருதலின் சுவையினையும் சிறப்பினையும், யாவரும் இனிதுணரலாம்.

## தொல்காப்பியர் :

இத்தகைய சிறப்புடைமை பற்றியே தொல்காப்பியர் **பாட்டு உரை நூல் வாய்மொழி பிசி அங்கதம்** என்பவற்றோடு, பழமொழிகளையும் சேர்த்து யாப்பு உறுப்புக்கள் பலவற்றுள் ஒன்றாகக் கூறியருளினர். பழமொழிகள் நுண்மை (Subtlety), சுருக்கம் (Brevity), ஒண்மை (Suggestiveness) எண்மை (Simplicity) முதலிய பல பண்பு நலங்கள் உடையனவாகத் திகழும் என்றும் அவர் விதந்தோதுகின்றார்.

"நுண்மையும் சுருக்கமும் ஒளியுடை மையும்
எண்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்
குறித்த பொருளை முடித்தற்கு வரூஉம்
ஏது நுதலிய முதுமொழி என்ப"

## பழமொழி நானூறு :

உலகெங்கணும் உள்ள பல்வேறு மொழியாளர்களும், தத்தம் மொழிகளில் வழங்கும் பழமொழிகள் பலவற்றையும் ஒருசேரத் தொகுத்துப் பெரும் பெரும் நூற்களாக்கி இஞ்ஞான்று பதிப்பித்து வெளியிட்டு வருகின்றனர். நம் தமிழ் மொழியின் கண்ணும் மிகப் பல நூற்றாண்டு கட்கு முன்னரே **முன்றுறையரையனார்** என்னும் புலவர் பெருமான், தம் காலத்தில் வழங்கிய பழமொழிகளில் நானூற்றினைத் தொகுத்து, அவற்றாற் பெறப்படும் நீதிகளை யுணர்த்திப் **பழமொழி நானூறு** என்னும் நூலை இயற்றியளித்துள்ளார். அது **பதினெண் கீழ்க்கணக்கு** நூல்களுள் ஒன்றாகத் திகழ்கின்றது. **ஷேக்ஸ்பியர்** என்னும் ஆங்கிலப் பெருங்கவிஞரின் '**வெனிசு நகர வாணிகன்**' முதலிய நாடகங்களின் இடையிடையே பல பழமொழிகள் பயின்று வந்து, அவற்றின் இலக்கியச் சுவை நலத்தினை மிகுதிப் படுத்துதல் காணலாம். காலஞ் சென்ற தமிழ்ப் பேரறிஞர் திரு. **செல்வ கேசவராய முதலியார்** M.A. அவர்கள், பல வகைப் பழமொழிகளையே தொகுத்து அடுக்கித் தொடுத்து வைத்து, ஓர் அழகிய இனிய கட்டுரை யாக்கி விடுவர்!

## திருமுறைகளிற் பழமொழிகள் :

பழமொழிகள் பாடல்களுக்குச் சுவை யூட்டிநிற்கும் பான்மையினவாகத் திகழ்தலின், பண்டைச் சான்றோர்களின் பாடல்களிலும் பழமொழிகளும் உலக வழக்கு நவிற்சியணிகளும் ஆங்காங்கே அமைந்து காணப்படும். **திருஞான சம்பந்தர்** தேவாரத் திருமுறைகளில்,

'ஊமனார் தங்கனா'
'உழுந்துருளும் அளவை'
'நீலம் உண்டதும் வெள்ளை நிறம் ஆமே'

என்பனபோன்ற பழமொழித் தொடர்கள் விரவி வருதல் காணலாம். **சுந்தர மூர்த்தி சுவாமிகளின்** தேவாரத் திருப்பாடல்களில்,

'பேயோடேனும் பிரிவரிது'
'மணக்கோலமதே பிணக் கோலமதாம்'
'கடை எலாம் பிணைத் தேரை வால்'
'அரைத்த மஞ்சள தாவதை அறிந்தேன்'
'கழுதை குங்குமம் தான் சுமந்து
எய்த்தாற் கைப்பர் பாழ்புக'
'பிழுக்கை வாரியும் பால்கொள்வர்'
'மகத்திற் புக்கதோர் சனி எனக்கு ஆனாய்'

என்பன போன்ற பழமொழிகளும், உலக வழக்குரைகளும் ஆங்காங்கே விரவி வந்துள்ளன. **திருநாவுக்கரசு** சுவாமிகளின் தேவாரத் திரு

முறைகளில் 'பழமொழித் திருவிருத்தம்' என்றே தனியாகச் சிறந்ததொரு திருப்பதிகம் அமைந்துள்ளது.

'கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வனேனே'
'முயல்விட்டுக் காக்கைப்பின் போன வாறே'
'அறம்இருக்க மறம் விலைக்குக் கொண்டவாறே'
'பனிநீராற் பரவைசெயப் பாவித் தேனே'
'ஏதன்போர்க்கு ஆதனாய் அகப்பட் டேனே'
'இருட்டறையில் மலடுகறந்து எய்த்த வாறே'
'விளக்கிருக்க மின்மினித்தீக் காய்ந்த வாறே'
'பாழூரிற் பயிக்கம்புக்கு எய்த்த வாறே'
'தவம் இருக்க அவஞ்செய்து தருக்கி னேனே'
'கரும்பிருக்க இரும்புகடித்து எய்த்த வாறே'

## திருவாசகத்திற் பழமொழிகள் :

மாணிக்க வாசகர் அருளியலில் மட்டுமேயன்றி, உலகியலிலும் தலைசிறந்த அனுபவவுணர்வு கைவரப் பெற்றவர். பாண்டிய வேந்தனின் மாண்புயர் அமைச்சராகத் திகழ்ந்திருந்த மாணிக்கவாசகர், உலகியலனுபவம் நிரம்பியிருந்தவர்எனக்கொள்ளுதலில் தடையும் உண்டோ? உலகியல் அனுபவமும் அருளியல் அனுபவமும் ஒருங்கே நிரம்பிய மாணிக்கவாசகரின் திருப்பாடல்களில், அருளியற் செய்திகளைக் குறிப்பிடுவதற்கு உதவியாக உலகியற் பழமொழிகளும் ஒரோவழி விரவி வருதல் இயல்பே யன்றோ? திருவாசகத்தின் பலதிறச் சிறப்புகளுக்கு அதன் கண் பயின்றுவரும் பழமொழிகளும் ஒரு பெருங் காரணமாகும்.

(1) அலைகடல் திரையின் ஆர்த்தார்த் தோங்கி, (2) தடக்கையின் நெல்லிக்கனி எனக்காயினன், (3) தழலது கண்ட மெழுகது போல, (4) கொடிறும் பேதையும் கொண்டது விடாது, (5) பசுமரத்தாணி அறைந்தாற்போல, (6) கண்டும் கண்டிலேன் என்ன கண்மாயமே, (7) இந்திர ஞாலம் போல வந்தருளி, (8) ஊராமிலைக்கக் குருட்டாமிலைத் திங்கு, (9) பிழைத்தவை பொறுக்கை எல்லாம் பெரியவர் கடமை, (10) பொறுப்பரன்றே பெரியோர் சிறு நாய்கள் தம்பொய்யினையே, (11) விச்சுக்கேடு பொய்க்காகா தென்றிங்கெனை வைத்தாய், (12) பட்டி மண்டபம் ஏற்றினை எட்டினோ டிரண்டும் அறியேனையே, (13) கல்லைப் பிசைந்து கனியாக்கி, கல்நார் உரித்து, (14) மழக்கை இலங்கு பொற்கிண்ணம், (15) தாம் வளர்த்ததோர் நச்சுமாமரமாயினும் கொல்லார், (16) ஆற்றங்கரை மரமாய் வேருருவேன், (17) தீப்புகு விட்டிலில், (18) இருதலைக் கொள்ளியினுள் எறும் பொத்து, (19) கடலினுள் நாய் நக்கியாங்கு, (20) வெள்ளத்துள் நாவற்றியாங்கு, (21) இருந்தென்னை ஆண்டுகொள் விற்றுக்கொள் ஒற்றிவை, (22) கொம்பரில்லாக் கொடிபோல், (23) ஆனை வெம்போரிற் குறுந்தூறெென, (24) எறும்பிடை நாங்கூழென, (25) மொய்க்கும் நெய்க்குடந் தன்னை எறும் பென, (26) பெருநீர் அறச்சிறு மீன் துவண்டாங்கு, (27) வேட்கை வெந்நீர், (28) தயிரிற் பொரும் மத்துற, (29) வாழைப் பழத்தின் மனங்கனிவித்து, (30) பொதும் புறு தீப்போல், (31) தலையால் நடந்த வினைத் துணையேன், (32) பலாப்பழத்துஈயின் ஒப்பாய், (33) உங்கையிற் பிள்ளை உனக்கே அடைக் கலம், (34)எங்கெழில் என்ஞாயிறு, (35)பேய்த்தேர் முகக்குறும் பேதை குணம், (36) வல்வினையின் வாயிற் பொடியட்டி, (37) பிரைசேர் பாலின் நெய்போல, (38) இரைதேர் கொக்கொத்து, (39) நரிப்பாய் நாயேன் இருப்பேனோ, (40) பாவிடையாடு குழல்போல், (41) புளியம்பழம் ஒத்திருந்தேன், (42) என்னதோ இங்கு அதிகாரம், (43) தோளாச்சுரை, (44) பாழ்ச்செய் விளாவிப் பயனிலியாய்க் கிடப்பேன், (45) நுகமின்றி விளாக்கைத்து, (46) கீழ்ச்செய்தவத்தாற் கிழியீடு நேர்பட்டு, (47) உழைத்தால் உறுதியுண்டோதான், (48) பிழைத்தால் பொறுக்க வேண்டாவோ, (49) அழைத்தால் அருளாது ஒழிவதே, (50) திகைத்தால் தேற்ற வேண்டாவோ, (51) ஓடும் கவந்தியுமே உறவு, (52) சவலையாய் நாயேன் கழிந்து போவேனோ, (52)பொற்றவிசு நாய்க்கிடுமா றன்றே.........

## பழமொழிகளால் விளைந்த பயன் :

இங்ஙனம் உலகியற் பழமொழிகள் மிகுதியும் விரவத் திருவாசகம் இயன்றுண்மையின், அதன்கவிதைச் சிறப்புமிக மேம்பாடுறுறு விளங்குகின்றது. வோர்ட்ஸ் வொர்த் முதலிய மேல் நாட்டுக் கவிஞர்கள் சிலர், மக்கள் தம்முள் இயற்கையாகப் பேசிக் கொள்கின்ற முறைமைக்கு ஏற்பவே கவிதைகளின் நடையும் அமைதல் வேண்டும் என்பர். அஃதெங்ஙனமாயினும், அவர்களனையர்தம் கொள்கைகளுக்கும் ஏற்ற நடையினதாகத் திருவாசகம் திகழ்தல் அறிந்தின்புறற் பாலது.

# ஸ்ரீகாஞ்சீ ஹஸ்திகிரி வைபவம்.

மகாவித்துவான் ஸ்ரீ P. B. அண்ணங்கராசார்ய ஸ்வாமிகள், காஞ்சிபுரம்.

( முன் இதழ்த் தொடர்ச்சி )

## தேவப்பெருமாள் திருவவதரித்தல்.

அந்தப் புண்ணியகோடி விமானத்தினுள்ளே *உலகேத்து மாழியா னத்தியூரான்* என்றும், *வரந்தரும் மாமணி வண்ணன்* என்றும் ஆழ்வார்களால் போற்றப்பட்ட பேரருளாளப் பெருமாளென்னும் ஸ்ரீ வரதராஜன் *கோலமா மணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்லதோ ரெழில் நீலமேனியனாய் மின்னுநூலும் குண்டலமும் மார்பில் திருமறுவும் மன்னு பூணும் நான்கு தோளுமுடையனாய், சங்கினோடும் நேமியோடும் தாமரைக் கண்களோடும் செங்கனிவாயொன்றினோடுங் கூடினனாய் பூந்தண்மாலைத் தண்டுழாயும் பொன் முடியும் வடிவும் பாங்கு தோன்றும் பட்டும் நாணுமாய்த் தொக்க சோதித் தொண்டை வாயும் நீண்ட புருவங்களும் தக்க தாமரைக் கண்களுமாய்க் குழுமித் தேவர் குழாங்கள் கைதொழச் சோதி வெள்ளத்தினுள்ளே எழுவதோருரு வென்னலாம்படி நிறைந்த சோதி வெள்ளம் சூழ்ந்த நீண்ட பொன்மேனியோடே தோளிணை மேலும் நன்மார்பின்மேலும் சுடர் முடிமேலும் தாளிணைமேலும் புனைந்த தண்ணந்துழாய் மாலையனாய்க் காட்சி தந்தருள, அந்த ஸேவையை நான்முகனுள்ளிட்டார் அடங்கலும் கண்டு ஆனந்தம் என்னும் அமுதக் கடலில் ஆழ மூழ்கினர். பிரமன் நெடுநாளாகத்தான் பட்ட பரிச்ரமம் பயன் பெற்றதற்குப் போர வுகந்து, ஸாஷ்டாங்க நமஸ்காரஞ் செய்து கூப்பிய கையனாய்,

“ தேவராய்த் தேவர்க்கும்
தெரியாத வொளியுருவாய்
மூவராய் மூவர்க்குள்
முதல்வனாய் நின்றோய் நீ;
போற்றுவார் போற்றுவதுன்
புகழ்ப் பொருளே யாதலினால்
வேற்றுவாசகமடியேன்
விளம்பு மாறறியேனால்;
பணித்தடங்கா திமையவர்க்கும்
பலபல நன்முனிவர்க்கும்
பணித்தடங்காப் புகழடியேன்
பணித்தடங்கற்பாலதோ,
யாங்கடவு ளென்றிருக்கு
மெவ்வுலகிற் கடவுளர்க்கும்

---

திருவாசகமும் பழமொழியும்... ..

சங்ககாலக் கடு நடையை விடுத்து, மக்கள் வழக்காறுகளைப் பெரிதும் தொடுத்து, புதுமையும் புரட்சியும் பூத்த பலதிறக் கவிதை அமைப்புக்களில், ஓதுவோர் உள்ளமெலாம் கொள்ளைகொள்ளும் வகையில், இக்கால நாட்டுப் பாடல்களைப் போல எளிமையும் இனிமையும் தெளிவும் இசைமையும் வாய்ந்து திருவாசகம் சிறந்திலங்குகின்றது.

மாணிக்கவாசகர், உலகியலும் அருளியலும் ஒருசேர “உண்மையான் உணர்ந்தோர்” ஆதலின், தாம் அருளியவைப் பாடுங்காலும் உலகியலினராகிய நம்மனோர் பொருட்டுப் பலதிற உலகியற் பழமொழிகளையும் உடன்தழீஇ ஒருங்கியைத்து இடையிடையே விராஅய்ப் பாடியிருத்தலும், அங்ஙனம் பாடினராயினும் அவை தம்மைக் கொச்சைமை சிறிதும் இல்லாப் பெற்றிமையிற் செய்யுள் வழக்கிற் கியையுமாறு மாட்சிமைப்பட வைத்து வழங்கியிருத்தலும் நம்மனோரை மிகவும் அகமகிழச் செய்கின்றன.

இத்தகைய மாணிக்கவாசகரின் புலமையருள் மாட்சிமையினையும், அவர்தம் திருவாசகத்தின் சிறப்பினையும் என்னென்றுரைப்பது! திருவாசகத்தின் சிறப்பிற்கும் உருக்கத் தன்மைக்கும் உரிய காரணங்கள் பலவற்றுள், அதன்கண் இடையிடையே அழகிய அரிய பழமொழிகள் விரவிவரும் திறனும் ஒன்றாகும்.★

ஆங்கடவு ள்நீ யென்றால்
அஃதுனக்கு வியப்பாமோ ?
கருதரிய வுயிர்க்குயிராய்க்
கரந்தெங்கும் பரந்துறையும்
ஒரு தனி நாயகமென்றாலுன்
பெருமைக்களவாமோ ?
அனைத்துலகு மனைத்துயிரு
மமைத்தளித்துத் துடைப்பது நீ
நினைத்த விளையாட்டென்றால்
நின்பெருமைக் களவாமோ ?"

என்றிங்ஙனே பலவாருகத் துதித்து வேரற்ற மரம்போலே பெருமானது திருவடிவாரத்திலே விழுந்து கிடக்க, பேரருளாளன் பேரருள் பொலியும் புன்முறுவல் செய்து இங்ஙனே அருளிச்செய்தான் ;— "பிள்ளாய்! பிரமனே! எழுந்திருப்பாயாக ; உனது திருவாராதனங் களுக்கு நான் மிகவும் உவந்தேன் ; உனக்குப் பலவகை நன்மைகளுமுண்டாகுக : உனக்கு விருப்பமான வரத்தை வேண்டிக்கொள் வாயாக." என்று.

அது கேட்ட சதுமுகன் எழுந்து "பரம புருஷ! பலன்களெல்லாவற்றினும் மேம்பட்டுப் பரமபலனுயிருக்கின்ற உன்றன்னைப் பரம பாக்கியத்தினல் கண்குளிரக் காணப்பெற்ற அடியேனுக்குக் கை புகாத பலன் ஒன் றுண்டோ? அவாப்தஸமஸ்தகாமன் அடி யேனே யாகின்றேன் ; விரும்பிப் பெறவேண் டியதொன்றில்லை ; அடியேன் மீது பேரருள் பொலியுமாகில் இவ்வத்திமாமலையின் உச்சியின் மீதே நித்திய ஸந்நிதி பண்ணியருளி *வன் பெருவானக முய்ய வமரருய்ய மண்ணுய்ய மண்ணுலகில் மனிசருய்யத் துன்பமிகு துயரகல அயர்வொன்றிலாச் சுகம் வளர அகமகிழும் தொண்டர் வாழ நீடுழிகாலம் எழுந்தருளியிருக்க வேணுமென்று இவ்வளவே வேண்டிக்கொள் வதை நிறைவேற்றியருள வேணும்" என்று விண்ணப்பம் செய்தனன். பேரருளாளனும் அங்ஙனமே திருவுள்ளமுவந்து இசைந் தருளினன்.

[வேள்வி முடிவும் அவரவர்கள் தத்தம் இருப்பிடம் மீளுதலும்]

தனது வேண்டுகோளைப் பரம கிருபை யுடன் பரிபூர்த்தி செய்தருளிய பேரருளாளனது பரிபூர்ண அனுக்ரஹத்திற்குப் பாத்ரபூதனை பங்கயத்தோன் பரமானந்தம் பூரிக்கப்பெற்று வேள்வி முற்றுப்பெற்றதற் குறுப்பான அவ பிரதஸ்நானத்தை அனந்த ஸரஸ்ஸில் செய்து தக்ஷிணைகளும் கொடுத்து அவரவர்களைத் தத்தம் இருப்பிடங்கள் சென்று சேருமாறு பஹுமானத்தோடு விடை தந்து அனுப்பினன். தேவேந்திரன் அமரர்களோடும் அப்ஸரஸ் ஸுக்களோடும் வித்யாதரர் முதலானுரோடுங் கூடி ஸ்வர்க்க லோகத்திற்குச் சென்றனன். வஸிஷ்டர் முதலிய மஹர்ஷிகளும் தம் தம் ஆச்ரமங்களை நோக்கி நடந்தனர். சக்ரவர்த்தி களும் தம் தம் நகர் நோக்கிச் சென்றனர். நித்ய ஸூரிகளும் முக்தர்களும் மாத்திரமே பேரருளாளனுடைய அத்தாணிச் சேவகத்தில் ப்ரேமம் நிரம்பினவர்களாய் இவ்வுலகத்தா ருடைய கண்ணுக்குப் புலப்படாமே அங்கு வாழ்ந்து வந்தனர்.

[க்ருத யுகத்தின் முடிவில் தன்னுலகம் செல்லுமாறு நான்முகனுக்கு விடை தருதல்.]

க்ருதயுகம் முடியுமளவும் மிக்க மகிழ்ச்சி யுடன் திவ்யோபசாரங்கள் செய்து தன்னை ஆராதித்து வருகின்ற அம்புயத்தோனை நோக்கி அத்திகிரிநாதன் அன்பு ததும்ப அருளிச் செய்யலாயினன் ; "பிரம! அத்தாணிச் சேவகத்தினல் அகமகிழ் கின்றனன். வேண்டிய வரத்தைப் பெற்றுக்கொண்டு உனது உலகத்திற்குச் சென்று சேர்வாயாக" என்று. இங்ஙனம் நியமிக்கப்பெற்ற நான்முகன் இவ்விடத் திலேயே நித்யகைங்கரியம் செய்துகொண்டு வாழ்வது தவிர வேறென்றிலும் விருப்பமில் லாமையும் பிரியில் தரியாமையையும் தெரி வித்து' இங்குத் திருவடிவாரத்திலேயே அடி யேனுக்கு நித்யவாஸ நியமநம் தந்தருள வேணும்' என்று பிரார்த்திக்க,

"பிரமனே! அநுஜ்ஞா கைங்கரியத்திற் காட்டிலும் ஆஜ்ஞா கைங்கரியமே மிகச் சிறந்த தென்பதை நீ அறிவாயன்றே. ஸத்ய லோகத்தை நிர்வஹிக்க வேண்டிய கடமையில் நீ நியமிக்கப்பட்டிருக்கின்றுயாதலால், அந்த ஆஜ்ஞா கைங்கரியத்தைத் துறந்து இங்கு என்னருகே வாழ்ந்திருக்க விரும்புவது உரிய தன்று. ஆகவே, நெடுநாளாக உன்னைவிட்டுப் பிரிந்து துடிக்கின்ற உன்னுலகத்தவர்களை மகிழ்விக்க வேண்டி நீ அவ்விடமே சென்று சேர்ந்து என்னைச் சிந்தை செய்துகொண்டே

ஆஜ்ஞா கைங்கரியங்களை நிர்வகிப்பாயாக. என்னைவிட்டுப் பிரிந்ததாக வெண்ணி நீ துயருறவும் வேண்டா. உனது நின்மலமான நினைவிலே நிரந்தரம் நான் இருக்கின்றேன் அன்றோ? அன்றியும் இன்னமும் ஒன்று கேள்; முதல் யுகமான க்ருத யுகத்தில் நீ திருவாராதனம் செய்ததுபோல, இரண்டாவதான த்ரேதா யுகத்தில் **கஜேந்திரனும்,** மூன்றாவதான த்வாபர யுகத்தில் **ப்ருஹஸ்பதியும்,** நான்காவதான கலியுகத்தில் **ஆதிசேஷனும்,** திருவாராதனம் ஸமர்ப்பிப்பார்கள்; ஆனால், எந்நாளிலும் ஆண்டுதோறும் சித்திரை மாஸத்தில் சுக்ல சதுர்த்தசி யன்று நீ இவ்விடம் வந்து சேர்ந்து பௌணர்மி யன்று நியமேந எனக்குத் திருவாராதனம் ஸமர்ப்பிக்கக் கடவை.'' என்று நான்முகனுக்குப் பேரருளாளன் நியமனம் அளித்தனன். அந்த நியமனத்தைச் சிரமேற்கொண்ட விரிஞ்சன் வரதராஜனை வணங்கி வாழ்த்தி இத்திசை நோக்கி அஞ்சலி செய்து கொண்டே ஸத்யலோகம் சென்று சேர்ந்தனன். காஞ்சீ நகரமும் நாளடைவில் காடு போலாயிற்று.

**[த்ரேதாயுகத்தில் திருவாராதனம் செய்பவரான கஜேந்திராழ்வானது சரிதை.]**

கீழ்க் கூறியவண்ணமான க்ருதயுகக் கதையை நாரத முனிவர் பக்கல் கேட்ட ப்ருகு முனிவர், 'அடுத்த த்ரேதாயுகத்தில் பேரருளாளப் பெருமாளை ஆராதிக்கும் பாக்கியத்தை ஸ்ரீ கஜேந்திராழ்வான் பெற்றது எங்ஙனம்?'' என்று வினவி, அந்த வரலாற்றையும் அம் முனிவர் வாயில் செவியுற்றனர்; அது வருமாறு:

முற் காலத்தில் ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடையரான **மஹாசாந்தர்** என்னும் ஒரு முனிவரர் இருந்தனர். அவர் ஒருகால் எம்பெருமானைக் குறித்து அருந்தவம் புரிய வெண்ணி மாமுனிவரது திரள்மலிந்த த்ரிகூட மலையுச்சியிற் சென்று சேர்ந்து கொடியதோர் தவம்புரியத் தொடங்கினர். அந்தத் தவ வலிமையைக் கண்ட தேவேந்திரன் தனது பதவிக்குக் கேடு விளையுமோ என அஞ்சி, எவ்வகையினாலாவது இத்தவத்திற்கு இடையூறு விளைக்கவேணுமென்று துணிந்து தேவமாதர்கள் அனைவரையும் ஏவி அனுப்பினன். அம்மடந்தையர் அனைவரும் த்ரிகூட மலையுச்சி தனில் மஹாசாந்த முனிவன் பக்கலில் வந்து சேர்ந்து பல வகையான சிருங்கார சேஷ்டைகளைச் செய்தனர்; ஆடல் பாடல் முதலிய அழகிய விலா ஸங்களை அளவறப் பண்ணினர்.

இங்ஙனம் அமரமங்கையர் எவ்வளவு விலாஸங்களை இயற்றிய வளவிலும் மஹாசாந்த முனிவரது மனம் சிறிதும் கலக்கமுறாமலே எம்பெருமானுடைய திருவடியிணையை விட்டு அகலாதிருந்தது. அரம்பையானவள் அஹங்காரமற்றெழுந்தாள்; உருப்பசியானவள் உறக்கங்கொண்டனள். பூர்வசித்தி யென்பாள் புன்மையெய்தி யொழிந்தாள்; இங்ஙனம் ஒவ்வொருத்தியும் செருக்கடங்கி வந்த வழியே மீண்டேகினர்.

மஹாசாந்த முனிவருடைய தவவுறுதி அசைக்கவு மொண்ணாதென்பதை அமரர் தலைவன் அம் மடந்தையர்பால் கேட்டறிந்த பின்பும், தானே நேரில் வந்து மாயையினால் அம்முனிவரை மோஹிப்பிக்க விரும்பி அழகியதோர் யானை வடிவமெடுத்துப் பல பிடிகளுடன் விளையாடா நின்று, அம்முனிவரது ஆச்ரமத்தருகே வந்து அவர் கண்ணெதிரே அங்குமிங்கும் உலாவிக்கொண்டிருந்தனன்.

இப்படி யிருக்கையில் ஒரு நாள் அம்முனிவர்; தம்மெதிரே பிடிகளுடன் விளையாடும் களிற்றினைக் கண்டு மன விகாரமுற்றுத் தாமும் களிறுகிக் கிரீடை செய்ய விருப்பங்கொண்டார். யோகம் கைவந்தவ ராகையாலே அப்போதே களிறுகவுமாயினர். காமத்தின் வயப்பட்ட அக்களிற்றரசு விஷய போகங்களிலே பரந்து சென்றது. பிடிகளுடன் விளையாடிக்கொண்டே பல தலங்களுஞ் சென்ற கஜராஜன், ஒரு நாள் சாளக்கிராமத்தினருகே செல்லுகையில் அங்கு **சக்கர நதியில்** குடைந்தாடப் பெற்றதனால் முற்பிறவியை நினைக்கு மாற்றல் பெற்றனன். முன் பரமபுருஷனைப் பூஜிப்பதில் தனக்கு இருந்த ஊற்ற மிகுதியையும் விஷயாந்தர விரக்தியையும் நினைத்து நினைத்து அப்போதைய நிலைமைக்கு மிகவும் மனம் நொந்து, பண்டு போலவே பரம புருஷ பூஜையிலேயே அளவுகடந்த ஆஸக்தி பெற்றுத் தூயநன்மலர்களால் தூமணிவண்ணனை நிரந்தரமாக ஆராதித்து வருவதையே பொழுது போக்காகக் கொண்டது.

[கஜராஜன் காஞ்சீ ஹஸ்திகிரி வைபவத்தைச் செவியுறுதல்.]

ஆங்காங்கு புண்ய ஸ்தலங்களில் புராண புருஷனைப் புஷ்பங்களினுல் பூஜித்துக் கொண்டே வருகின்ற புனித கஜராஜன் கோதாவரி நதி தீரத்தில் வந்துகொண்டிருக்கையில் பரம பவித்திரமான ஒரு மஹர்ஷியின் ஆச்ரமத்தினுள்ளே புகுந்து அவ்விடத்தில் ஒப்புயர்வற்ற வைபவம் வாய்ந்து விளங்கும் ம்ருகண்டு வென்னும் மாமுனிவரைக் காணப்பெற்றுப் பெரு மகிழ்ச்சிகொண்டனன். அவ்விடத்திலேயே சிலகாலம் வஸிக்கும்படியான பாக்கியமும் நேர்ந்தது. முற்பிறவிகளின் சரிதைகளையும் கண்டறிந்து கூறவல்லவரான அம்முனிவரை ஒரு நாள் கஜராஜன் பணிந்து "ஸ்வாமிந்! இவ்வுலகில் மிக்க பெருமை வாய்ந்த மலைகள் எவை? புண்ணிய நகரங்கள் எவை?" என்று கேட்க; அதற்கு அம்முனிவர் இங்ஙனம் விடையிறுத்தார்; "கஜராஜனே! அயோத்யை, மதுரை, மாயை, காசி, காஞ்சீ, உஜ்ஜயிநீ, த்வராவதீ என்பன ஏழு புண்ய புரிகள்; மந்தரம், ரைவதம், ஸிம்ஹம், மஹேந்தரம், கந்தமாதநம், ஹிமவாந், ஹஸ்திசைலம் என்பன ஏழு பாவனங்களான பருவதங்கள். புரிகளுக்குள்ளே காஞ்சீபுரியும், மலைகளுக்குள்ளே ஹஸ்திகிரியும் மிக்க சிறப்புறுவன. அந்த ஹஸ்திகிரியின் உச்சியில் தேவராஜப் பெருமாள் அயமேத வேள்வியில் அயனுக்கு அருள் புரிந்து ஆவிர்ப்பவித்து அணிவிளக்காக விளங்கா நின்றார்; அப்பெருமானது திருவடி வாரத்திலேயிருந்து தொண்டுபூண்டு அமுதமுண்ண உமக்குத் திருவுள்ளமாயின் அங்ஙனம் செய்க என்று.

[கஜராஜன் முதலைவாய்க் கோட்பட்டு வருந்துதல்.]

ம்ருகண்டு மாமுனிவன் சொற்படியே திருவத்திமாமலை வந்து சேர்ந்த கஜராஜன் வரதராஜனைக் கண்ணாரக் கண்டு களித்து "நாடாத மலர் நாடி நாடோறும் நாரணன்தன், வாடாத மலரடிக்கீழ் வைக்கவே வகுக்கின்று" என்கிற படியே தூய நன் மலர்களைக்கொண்டு தூவித் தொழுவதே தொழிலென்று துணிந்து, குவளை கமலம் முதலிய நன்மலர்களை நாடோறும் கொணர்ந்து நம் வரந்தரும் பெருமாளுடைய நாண்மலரடிக்கீழ்ப் பணிமாறிப் போது போக்கி வந்தனன். நித்யமும் பதினுலாயிரம் பங்கய மலர்களைக் கொண்டு பரிசரியை பண்ணுவதென்று பாவனமான விரதம்பூண்டு அங்ஙனமே தவருது தொண்டுசெய்து வருகையில், ஒருகால் வறட்கேடுமிக்குப் பொய்கைகளெல்லாம் உலர்ந்துபோய் ஓரிடத்திலும் ஒரு பூவும் கிடையாததாக, நெடுந்தூரம் தேடிக்கொண்டே செல்லுமளவில், த்ரிகூட மலையுச்சியில் ஒரு சிறந்த தாமரைத் தடாகம் உளதாக, அதனுடைய நறுமணத்தைக் கொய்துகொண்டு நன்மாருதம் வீச, அவ்வழியே பற்றிச்சென்று அப்பொய்கை சென்று சேர்ந்து கமல மலர்களைப் பறிக்கப் புகுந்த கஜராஜன், ஆங்கு நெடுங்காலமாய் உறைந்துவந்த முதலையின் வாயில் அகப்பட்டு அது நீருக்கிழுக்க இவன் கரைக்கிழுக்க இங்ஙனஞ் செல்லுகையில் தன் முயற்சி பயன்படாமை கண்டு தளர்ந்து "நாராயணு ஓ! மணிவண்ணு! நாகணையாய்! வாராய் என்னுரிடரை நீக்காய்" என்று பெருமிடறு செய்து கூவி அழைத்தனன்.

[வரதராஜன் கஜராஜனுக்கு அருள் புரிதல்.]

கஜேந்திரனுடைய கூக்குரல் செவிப்பட்டவாறே வரதராஜன் நிலை கலங்கிப் பறவையேறு பரமபுருடனுய் அரைகுலையத் தலைகுலையப் பதறியெழுந்தருளி அப்பொய்கைவாய்ச்சென்று சேர்ந்து கஜராஜன் கராங்கொளக் கலங்கியிருக்கும் இருப்புக்கண்டு 'அந்தோ, என்னடியானை நீர்ப்புழுவின் வாயிலே துடிக்க விட்டேனே!' என்று திருவுள்ளம் நொந்து, திருவாழியை விட்டு முதலையைத் துணித்து, கஜராஜன் கொய்த கமல மலர்களைத் திருவடிகளிலே சேர்ப்பிக்கப்பெற்று, அக்களிற்றரசனைக் கைளால் தடவிக் களிப்பித்து 'பக்தசிகாமணீ! க்ருதயுகத்திலே கமலாஸனன் செய்த திருவாராதனத்தினுற் போல இந்த த்ரேதாயுகத்திலே உன்றன் குற்றேவலால் போரவும் உவந்தேன்; இனி நீ நலமந்தமில்லதோர் நாடுபுக்கு நித்ய கைங்கரியம் செய்துகொண்டு நித்யானந்தசாலியாய் இருப்பாயாக' என்று அருள் விடை தந்து அத்திமா மலையுச்சியில் வந்தமர்ந்தனன்.

[இனி த்வாபரயுக-ஆராதனக்ரம முரைத்தல்.]

இங்ஙனம் பேரருளாளப் பெருமாளுடைய த்ரேதாயுகத் திருவாராதன விபவத்தை நாரத முனிவர் சொல்லக்கேட்ட ப்ருகு மஹர்ஷியானவர், பின்னர் த்வாபரயுகத்தில் ப்ருஹ

ஸ்பதி திருவாராதனம் செய்யுமாறு பாக்கியம் பெற்ற வரலாறு எங்ஙனேயென்று கேட்கையில், அதனையும் அம்முனிவர் தாமே சொல்ல லுற்றனர்.

[ப்ருஹஸ்பதியின் சாப வரலாறு.]

நாளடைவில் காஞ்சீபுரியானது காடான அளவில் தேவபிரான் திருமாமகளோடு கூட உலாவிக் கொண்டிருக்கையில், மஹர்ஷியின் சாபத்தினுல் மண்ணுலகில் வந்து சேர்ந்து பாவம் தொலேவதற்காகத் திருவனந்த ஸரஸ் ஸின் கரையில் தவமியற்றிக்கொண்டிருந்த ப்ருஹஸ்பதியினுல் காணப்பட்டு, 'யாரோ வொரு ராஜகுமாரன் தன் மஹிஷியோடு இங்ஙனே உலாவுகின்ருன் போலும்' என்று எண்ணின அந்த ப்ருஹஸ்பதி யினுல் "அரச குமாரனே! புலி முதலிய கொடிய மிருகங்கள் மலிந்த இக்கானகத்தில் நீ இங்ஙனம் உலாவலாகாது" என்று சொல்லப் பட்டும் அதற்கு விடையொன்றும் கூருமலும், ஸ்வஸ்வரூபத்தைக் காட்டாமலும் அந்த திவ்ய தம்பதிகள் ஸ்ரீஹஸ்தி சைல சிகரத்திற் புகுந் தருளினர். அந்த ப்ருஹஸ்பதிக்கு மஹர்ஷி சாபம் வந்த வழியைக் கேண்மின்:—விண் ணுலகில் தேவேந்திரன் ஒரு நாள் தனது கொலுமண்டபத்தில் வீற்றிருந்து ச்ருதி ஸ்மிருதி இதிஹாஸ புராணங்களில் தேர்ச்சிபெற்ற மஹர்ஷிகளைத் திரட்டிச் சேர்த்து அவர்களிடம் பல வகையான தருமங்களைப் பற்றிக் கேட் டான். பல பல கேள்விகளிடையில் இங்ஙனே ஒரு கேள்வி யுண்டாயிற்று; அதாவது "வேதங்



ஸ்ரீ வரதராஜர் கோயிற் கோபுரம்

களை ஓதுதல், ஓதுவித்தல், அதிதிகளை ஸத்கரித் தல், பஞ்சகால பராயணர்களாய் பகவதாரா தனம் முதலியவற்றில் ஊன்றியிருத்தல் ஆகிய இப்படிப்பட்ட வழிகளில் வழுவாது க்ருஹத் திலேயிருந்து கொண்டு வாழ்தல் நல்லதா? அல்லது இங்ஙனம் க்ருஹத்தில் வாழ்வதை விட்டுத் தீயோம்புதல் முதலிய கருமங்களையும் விட்டுத் திவ்ய க்ஷேத்ர புண்ய தீர்த்தங்களில் அவகாஹிப்பதையே விரதமாகக் கொண்டு எப்போதும் திவ்யதேச ஸஞ்சாரங்கள் செய்து கொண்டிருப்பதே நல்லதா? இதை மஹர்ஷி கள் நன்கு ஆராய்ந்து விடை கூறவேணும்" என்று.

இங்ஙனம் தேவேந்திரனுல் வினவப்பட்ட முனிவர்கள் ப்ருஹஸ்பதியை நோக்கி, 'எமக் கெல்லார்க்கும் தலைவராய் மிகச் சிறந்தவரான நீரே இவ்வினுவுக்கு விடையிறுப்பீராக' என்று கோரினர். இந்த வேண்டுகோளுக்கிணங்கிய ப்ருஹஸ்பதியானவர் "க்ருஹத்திலேயே யிருந்து தருமங்களை யனுட்டிப்பவன் தாழ்ந்த வன்; தீர்த்த யாத்திரையில் செல்பவனே மேம் பட்டவன்" என்று தேவகோஷ்டியில் நிர்த்தா ரணையாகக் கூறினர்.

[முனிவர்களால் சபிக்கப்பட்ட பிருஹஸ்பதி மண்ணுலகில் வந்து பிறத்தல்]

இங்ஙனம் ப்ருஹஸ்பதி நிஷ்கர்ஷித்துக் கூறினதைக் கேட்ட முனிவர்கள் இது சாஸ்திர விருத்தமாகச்சொல்லப்பட்டதென்று கருதி, க்ரு ஹத்திலே யிருந்து சாஸ்த்ர விஹிதங்களான

தருமங்களை யனுட்டித்துகொண்டு பரமைகாந்தியாய் வாழ்வதை இழிவாக கூறி, ஊர்சுற்றுவதை உயர்வாகக் கூறின இந்த ப்ருஹஸ்பதியின் கொள்கை உலகிற் பரவுமாயின் தரும மார்க்கம் மிகவும் சிதைவுறும்; மஹாஸபையில் இங்ஙனம் தவறுதலான முடிவு கூறின குற்றத்திற்குப் பயனுகை இந்த ப்ருஹஸ்பதி மண்ணுலகில் ஒரு தரித்திரனுக்குப் புதல்வனுய்ப் பிறந்து கஷ்டங்களை யனுபவிக்குமாறு சாபம் பெறத் தக்கவன்'' என்று கூறி அங்ஙனமே சாபமிட்டுப் போயினர்.

அந்த சாபத்தினுல் தேசிழந்த ப்ருஹஸ்பதி விண்ணுலகில் நின்றும் நழுவி மண்ணுலகில் வீழ்ந்து ஒரு வறியனுடைய இல்லத்தில் அந்தண யோனியிற் பிறந்தனன். பிறந்ததும் தாய் தந்தையரை யிழந்து பலவகைக் கஷ்டங்களுக்கு ஆளாகிப் பசி தாகங்களினுல் மிகவும் பீடிக்கப்பட்டுக் கண்ட இடமெங்கும் பல்லைக் காட்டி யிரந்து திரிந்து ஒருவாறு உயிர்வாழ்ந்து வந்தான். நாளடைவில் கரிக்கட்டை போன்றவொரு காதலியை மணம் புணர்ந்தான். அவளிடத்திற் பல புத்திரர்களைப் பெற்றனன். குடும்பத்திலுண்டான ஏழைமைத்துயரம் எழுதுதற் பாலதன்று. ஒரு நொடிப்பொழுது கழிவது ஒரு யுகமாயிருந்தது. மழைக் காலத்தில் பிச்சையெடுக்கப் புறப்படவும் முடியாதபடி மிக்க வருத்தத்திற்கு ஆளாயினன். குடும்பத்தோடு பல்வகைப் பிணிகளாலும் மெலிந்தனன்.

[இடையில் ஒரு நாயின் கதை]

இப்படியிருக்கையில், சேனையுடன் கூடி வேட்டையாடிக் கொண்டிருந்த ஓர் அரசன் சற்றுப் போது இளைப்பாறுதற் பொருட்டு, இந்த வறியன் வசிக்கும் கிராமத்திலே தன் மக்களோடும் வந்து புகுந்தனன். இவ்வரசனது புதல்வனெருவன் மதம் பிடித்தவனுய் அங்குமிங்கும் திரிந்துகொண்டு சிறு விஷமங்களைச் செய்துகொண்டே வந்து, ஒரு நாய்ப்பேடையின் குட்டிகளுள் ஒன்றைக் கொன்றிட்டனன். அதனுல் கறுக்கொண்ட தாய்நாயானது அவ்வரச குமாரனைக் கணைக் கால்களில் கடித்திட்டது; அதனுல் கோபங்கொண்ட ராஜபடர்கள் அந்த நாயை நலியத் துரத்தி வந்தார்கள். அவர்களால் பின் தொடரப்பட்ட அந்த நாய் குட்டிகளோடுங்கூட ஓடிவந்து, உயிர் தப்புதற்காக அந்த வறியனது மனையினுட் புகுந்திட்டது. அப்போதுதான் படாத பாடுகள் பட்டுச் சிறிது அன்னத்தைச் சம்பாதித்துக் கொணர்ந்து உண்டுகொண்டிருந்த அந்த அந்தணன், தன் இல்லத்தினுட் புகுந்த அந்த நாயைக் கண்டு சினந்து தனது புதல்வர்களையும் சீறி, உடனே அந்த நாயை வெளியே துரத்துமாறு கட்டளையிட்டனன். அவர்களும் தந்தையிட்ட கட்டளையின்படியே அந்த நாயை வெளியில் துரத்திக் கதவடைத்தனர்.

பிறகு அந்த நாய் ஒரு ஸம்ஸ்காரவுணர்ச்சியினுல் தனது முற்பிறப்பின் விருத்தாந்தத்தை ஸ்மரிக்கப்பெற்று, ''முன் சன்மத்தில் நான் சரணுகதரக்ஷணம் பண்ணுதது காரணமாகவே இந்த நாய்ப் பிறப்பைப் பெற்றேன்; அடா பார்ப்பனனே! எனக்கு நேர்ந்த கதியே உனக்கும் நேரப்போகிறது காண்'' என்று சொல்லிக் குரைத்துக்கொண்டே செல்லுகையில், தேடிக் கொண்டிருந்த ராஜபடர்களின் கண்ணிற்பட்டுக் கொலையுண்டொழிந்தது.

இச் செய்தியை யுணர்ந்த அவ்வந்தணன் சரணமடைந்த ஜந்துவை மரணம் அடைவித்த கொடும் பாதகத்திற்குப் பரிஹார வழி தெரியாதவனுய் மிகவும் பரிதபித்துத் தன் இல்லத்தினின்று வெளியேறிச் சென்று கங்கைக் கரை சேர்ந்தனன். அங்கு ஸமாதியிற் கிடந்த பரத்வாஜ முனிவரைக் கண்டு வணங்கித் தன்னுடைய பாவத்தைக் கூறிப் பரிஹார வழி கேட்டனன்.

அவரும் அகக் கண்ணுல் ஆராய்ந்து ''கோதாவரி, கிருஷ்ணை முதலிய புண்ணிய நதிகளைக் கடந்து சென்று தொண்டை மண்டலத்தில் ஸத்ய விரத க்ஷேத்திரத்தில் ஹஸ்திகிரியின் அடியிலுள்ள திருவனந்த ஸரஸில் நீராடித் தவம் புரிந்து இப்பாவம் தொலையப் பெறுவாய்'' என்றுரைக்க, அவ்வரிய பெரிய இனிய மொழியைக் கேட்டு அந்தணன் அகமகிழ்ந்து அங்ஙனமே ஸத்யவிரத க்ஷேத்திரத்தை யடைந்து, புண்ணியகோடி விமானத்தைச் சேவித்துப் பேரருளாளனைச் சிந்தை செய்து கொண்டே திருவனந்தப் பொய்கைக் கரையில் தவமியற்றி வந்தனன்.

கிருதயுகத்தில் பிரமனுலும், திரேதா யுகத்தில் கஜேந்திரனுலும் ஆராதிக்கப் பெற்ற தேவாதிராஜன், த்வாபரயுகத்தில் ப்ருஹஸ்பதியினுல் ஆராதிக்கப் பெறத் திருவுள்ளம் பற்றி,

அந்த அந்தணனுகப் பிறந்திருக்கின்ற ப்ருஹஸ்பதியினுட் புகுந்து மிகச்சிறந்த தபஸ்ஸை அனுட்டிப்பித்தனன். அவன் இங்ஙனம் தவம் புரிந்துகொண்டிருக்க ;

சுவர்க்கலோகத்தில் மிகக் கொடிய தேவாசுர யுத்தம் நிகழ, அப்போரில் அசுரர்களிடம் பங்கமடைந்த அமரர்கள் பிரமனிடம் வந்து, 'எங்களுக்கு இப்படிப் பரிபவம் நேரிடக் காரணமென்கொல்?' என்று கேட்க, அதற்கு நான்முகக் கடவுள் கூறியதாவது :—"உங்களுடைய புரோஹிதரான ப்ருஹஸ்பதியானவர் முனிவர்களின் சாபத்தினுல் விண்ணுலகை இழந்து மண்ணுலகெய்தியதனுல் உங்கட்குப் பரிபவம் நேர்ந்திட்டது; புரோஹிதரற்ற கூட்டத்திற்குக் கேடு விளைவது வியப்பன்றே : அவரை இங்குக் கொணர்ந்து சேர்த்துக்கொண்டால் குறையொன்றுமில்லையாகும் ; அதற்குற்ற உபாயமும் உரைக்கின்றேன் கேண்மின்' சித்திரை மாதத்துப் பௌர்ணமாஸியன்று வழக்கப்படி நான் வரதராஜனை ஸேவிக்கப் போம்போது நீங்களும் என்னுடன் கூட வாருங்கள் ; வந்து வரதராஜனை இறைஞ்சியேத்தி இரந்து ப்ருஹஸ்பதியின் பாவங்களைப் போக்குவித்துப் பழையபடி புரோஹித பதவியில் அவரைப் பிரதிஷ்டாபவனம் செய்யலாம்" என்று.

அப்படியே தேவர்கள் நான்முகனேடு கூடக் கச்சி நகரேற வந்து பேரருளாளப் பெருமானை வணங்கி "ப்ருஹஸ்பதிக்கு நேர்ந்திருக்கின்ற மஹர்ஷி சாபமும் சரணுகதபரித்யாக பாதகமும் தொலையுமாறு அருள்புரிய வேணும்" என்று பிரார்த்தித்தனர்.

அந்தப் பிரார்த்தனைக்கு இணங்கிய பேரருளாளன் ப்ருஹஸ்பதி பக்கலில் பரிபூர்ண கடாக்ஷ அமிருத தாரைகளைப் பெருக்கியருள, அதனுல் மானிட உடல் நீத்துத் திவ்ய சரீரம் பெற்ற ப்ருஹஸ்பதியானவர் திருவத்தி மாமலை நாதனைத் தொழுதேத்தி "ஸ்வாமிந்! கிருதயுகத்தில் நான்முகனிடத்தும், த்ரேதாயுகத்தில் கஜேந்திரனிடத்தும் திருவாராதனம் கொண்டருளினது போல இந்த த்வாபர யுகத்தில் அடியேன் பக்கலில் திருவாராதனம் கொண்டருள வேணும்" என்று கைகூப்பி வேண்டினர்.

அவ்வேண்டுகோளுக்குத் திருவுள்ளமிரங்கித் தேவாதிராஜன் 'அங்ஙனமே யாகுக' என்று சோதிவாய் திறந்து பணிக்க, பிரமனுள்ளிட்ட அமரர்கள் அகமகிழ்ந்து தமது உலகம் மீண்டு சென்றனர். ப்ருஹஸ்பதி சிரத்தையோடும் பக்தியோடும் வரதராஜனுக்குத் திருவாராதனம் நடத்தி வருகையில் மண்ணுலகம் வளம் மிக்கது; விண்ணுலகமும் அரக்கரசுரர் போல்வாருடைய நலிவு தீர்ந்து இன்பமெய்தியது.

அப்போது அயோத்தி மன்னவர்களுள் குசதவஜனென்னுமரசன் மகப்பேறு பெறுதற்குப் பல விரதங்கள் அனுட்டித்தும் பேறுபெருதவனுய் வியாஸமுனியின் நியமனத்தின்படியே வந்து தென்னத்தியூரர் கழலிணைக்கீழ்ப் பூண்ட அன்பாளனுய்த் தேவபிரானது கடாக்ஷத்தினுல் விசுவஜித்தென்னும் ஒரு புதல்வனைப் பெற்றனன். அவன் நாளடைவில் பொருந்திய தேசும் பொறையும் திறனும் புகழும் பெற்று விளங்கிக் காஞ்சீபுரியை மஹா நகரமாக நிருமித்தனன். அவனது பரம்பரையில் தோன்றின மன்னவர்களும் தேவப் பெருமாளுடைய திருவடிகளில் அன்பூண்டு தொண்டு பூண்டு த்வாபர யுக முடியுமளவும் மிகச் சிறந்து விளங்கி வந்தார்கள்.

த்வாபர யுக முடிவில் தேவபிரான் ப்ருஹஸ்பதியை நோக்கி, "உனது திருவாராதனத்தினுல் மிக மகிழ்ந்தேன்; இனிக் கலியுகம் தொடக்கமாவதால் இந்த யுகத்தில் ஆதிசேஷன் என்னை ஆராதிக்கக் கடவன்; நீ உனது இருப்பிடம் சேருவாயாக' என்று கட்டளையிட, அவ்வண்ணமே ப்ருஹஸ்பதி தன் இருப்பிடம் சென்று சேர்ந்தனன்.

பிறகு திருவனந்தாழ்வான் தேவப் பெருமானை வெகு சிரத்தையுடன் ஆராதிக்கும் பாக்யம் பெற்றனன். இன்னமும் அவ்வாதிசேஷனுலேயே தேவப் பெருமாள் ஆராதிக்கப் பெற்றுப் பெருந்தேவித் தாயாரோடு பக்தவர்க்கங்களை அநுக்ரஹித்துக்கொண்டு நித்யோத்ஸவ பக்ஷோத்ஸவ மாஸோத்ஸவ ஸம்வத்ஸரோத்ஸவங்கள் முதலியவற்றைக் குறையற அநுபவித்துக் கொண்டு காஞ்சிமா நகரைப் பரமபதத்திற் காட்டிலும் பாங்குடையதாக ஆக்கிக் கொண்டு அற்புதமாகக் காட்சி தந்தருளா நின்றுன்.

பேரருளாளன் பெருந்தேவித் தயார் திருவடிகளே சரணம்.

(முற்றிற்று)

# அமலன் அவதாரம்

திரு. R. ஸ்ரீனிவாச ராகவாச்சாரியார் அவர்கள் M.A., B.O.L.

## முன்னுரை

அவதாரம் என்பது வட சொல். இறங்குதல் என்பது பொருள். உயரத்தில் இருப்பவன் தானிருக்கும் உயர்ந்த இடத்தைவிட்டுக் கீழே வருதல் இறங்குதல். தானம், யாகம், ஹோமம் முதலிய நல்வினைகளைச் செய்தவர்கள் அந்நல் வினைப் பயன்களைத் துய்ப்பதற்கு இந்நிலவுலகி லிருந்து சுவர்க்கம் முதலிய மேலுலகங்களுக்குச் சென்று, அங்கு அவ்வினைப்பயன்களைத் துய்த்த பின் 'க்ஷீணே புண்யே மர்த்யலோகம் விசந்தி' என்ற கணக்கில் மறுபடியும் இவ்வுலகத்திற்கு இறங்கி வந்துவிடுகிறார்கள். ஆனால், அவர் களுடைய இறக்கத்தை அவதாரம் என்று நாம் கூறுவதில்லை. ஏன்? அவர்கள் நம்மைக் காப் பாற்றுவதற்காகத் தம் விருப்பத்தினால் இந் நிலவுலகுக்கு இறங்கி வருவதில்லை. தங்கள் புண்யங்கள் செலவழிந்துவிடவே அங்கு இருக்க உரிமையிழந்து இறங்கி வருகின்றனராதலின்.

## இரக்கம் காரணமாக இறங்கி வருதல் :

இந்திரன் முதலிய தேவர்கள் சிற்சில சம யங்களில் இந்நிலவுலகிலுள்ளவர்களைக் காப் பாற்றுவதற்காக இந்நிலவுலகத்திற்கு இறங்கி வருகிறார்கள். அவர்களுடைய இறக்கத்தை யும் நாம் அவதாரம் என்று கூறுவதில்லை. ஏன்? அவர்கள், தங்களுடைய சுதந்திர விருப்பம் காரணமாக இறங்கி வருவதில்லை. அவர்களைக் கொண்டு நம்மைக் காக்க வேண்டுமென்கிற பரம புருஷனுடைய ஸங்கல்பம் காரணமாக அவர்கள் இறங்கி வந்து நம்மைக் காப்பாற்று கிறார்கள். அவர்கள் நம்மைக் காப்பதும் நாம் அவர்களால் காப்பாற்றப்படுவதும் பரமபுருஷ னுடைய ஸங்கல்பம் காரணமாக நிகழும் நிகழ்ச்சிகள். அவ்வாறு பரமபுருஷனுக்கு ஸங் கல்பம் (எண்ணம்) உண்டாவது காப்பவர் காப் பாற்றப்படுபவர் இவ்விருதிறத்தாருடைய வினை கள் காரணமாக நிகழ்கின்றது. ஆதலின் அவர்களின் இறக்கத்தையும் நாம் அவதார மெனக் கூறுவதில்லை. பின்பு எதை?

சுதந்திரனாகிய பரமபுருஷன் தன் விருப்பம் காரணமாகத் தன் இடத்தைவிட்டுக் கீழுலகங் களுக்கு இறங்கி வருவதைத்தான் நாம் அவ தாரம் என்று கூறுகிறோம். ஆதிமூலமே யென்று கதறிய ஆனையைக் காப்பதற்காகச் செம்புலா லுண்டு வாழும் முதலைமேற் சீறிவந்தது முதலிய இறங்கல்களை நாம் அவதாரம் என்று கூறு கிறோம்.

யானை செய்த புண்யம், முதலை செய்த பாவம் இவைகள் காரணமாகத்தானே பரமன் இறங்கி வந்தான். ஆதலின், இந்திரன் முத லிய தேவர்களுடைய இறக்கத்தினும் பரம புருஷனுடைய இறக்கம் எவ்வாறு வேறுபடும் என வேண்டா. பரமனுக்குக் கர்ம பந்தம் இல்லை. யானை கதறினும் இறங்கி வராமலிருப்ப தற்குப் பரந்தாமனுக்கு உரிமையுண்டு. இந் திரன் முதலியோருக்கு அத்தகைய உரிமை யில்லை. கர்மங்களால் உந்தப்பட்டு இறங்கி வரு கிறார்கள். பரமபுருஷனோ அத்தகைய உரிமை யிருப்பினும் இரக்கம் காரணமாக இறங்கி வரு கிறான். இறங்கு அல்லது இறங்காதே என்று கட்டளையிடுவதற்கு அவனுக்குமேல் மற்றொருவ னில்லை. யானை கதறியபின் வருவானேன்? இரக்கமுள்ளவனும் எல்லாமறிந்தவனுமாகிய பரமபுருஷன் யானை கதறுவதற்கு முன்பே இறங்கி வருவதுதானே என வேண்டா. பக்ஷ பாதம் முதலிய குற்றங்கள் தனக்கில்லாமலிருப் பதற்காகவே, அவன் அடியார் கதறும் வரை காத்திருந்து இறங்கி வருகிறான்.

ஆதலின் இரக்கம் காரணமாகப் பரமன் இறங்கி வருவதை நம்முன்னோர்கள் அவதாரம் எனக் கூறினர். நாமும் அவ்வாறே கூறு கிறோம். அவ்வவதாரம் ஒருவனைக் காப்பாற்று வதற்காகவும் இருக்கலாம். பலரைக் காப்பாற்று வதற்காகவும் இருக்கலாம். ப்ரஹ்லாதன் முத

வியவிஷயங்களில் ஒருவனைக் காப்பாற்றுவதற்காக அவதரித்தான். தேவர் முனிவர் முதலிய பலரைக் காப்பாற்றுவதற்காகவும் அவதரித்தான்.

### பொருளின் நிலைகள் :

பரம்பொருளின் நிலைகள் ஐந்து. அவை பரம், வியூகம், ஹார்தம், விபவம், அர்ச்சை என்பனவாம். இவ்வைந்துள் எவ்வித மாறுபாடுமின்றி எப்பொழுதும் ஒரே விதமாக இருப்பது 'பரம்' என்ற நிலை. இதுதான் ஆதிமூலப் பொருள். இம்முதல் நிலையை அவதாரம் என்பதில்லை. மற்ற நான்கையும் முறையே வ்யூஹாவதாரம், ஹார்தாவதாரம், விபவாவதாரம் அர்ச்சாவதாரம் என்கிறார்கள். இந் நான்கில் **வ்யூஹாவதாரம் ஹார்தாவதாரம்** இரண்டும் உலகம் படைக்கப்பட்டு இயங்குவதற்குக் காரணமாயிருப்பன. **விபவாவதாரம் அர்ச்சாவதாரம்** இரண்டும், ஏற்கனவே படைக்கப்பட்டு இயங்கிவரும் உலகத்தில் தீமையை நீக்கி நன்மையைப் பேணுவதற்காக அவ்வப்பொழுது ஏற்படுபவை.

**'பரித்ராணாய ஸாதூநாம் விநாசாய சதுஷ்க்ருதாம்**
**தர்மஸம்ஸ்தாப னார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே'**

என்று கண்ணன் தன்னுடைய விபவாவதாரத்தைப் பற்றிக் கூறுகிறார். விபவாவதாரத்தைப்பற்றிய இந்தப் பாசுரம் அர்ச்சாவதாரத்திற்கும் பொருந்தும்.

**வாஸுதேவன், ஸங்கர்ஷணன், அநிருத்தன், ப்ரத்யும்னன்** என வ்யூஹாவதாரங்கள் நான்கு. ஒவ்வொரு ப்ராணியின் இருதயத்திலும் அந்தர்யாமியாய் இருக்கும் நிலை ஹார்தாவதாரம். இது கணக்கற்றது. விபவாவதாரங்கள் பல. ஆயினும் அவற்றுள் முக்கியமாகப் பத்து அவதாரங்கள் நம்மவர்களால் கொண்டாடப் பெறுகின்றன. அவையாவன: மத்ஸ்யம், கூர்மம், வராகம், நரசிம்மம், வாமனன், பரசுராமன், தசரத ராமன், பலராமன், கிருஷ்ணன், கல்கி என்பவைகள்.

சிலர் **கல்கி** அவதாரத்தினை விடுத்துப் **புத்தர்** அவதாரத்தைச் சேர்த்துக் கணக்கிடுகிறார்கள். இவைகளில் ஒன்பது அவதாரங்கள் நடந்தவை. கல்கி அவதாரம் இனி நடக்கப் போவது.

### ஸ்ரீ தேசிகன் :

வீடு பெற விரும்புபவர்களுக்கு **அவதார சிந்தனம்** இன்றியமையாதது என்று **கீதை** முதலிய பல நூல்களிற் கூறப்பட்டுள்ளது. அதனையொட்டி **ஸ்ரீ தேசிகன்** அவர்கள், நாம் அனைவரும் அவதார சிந்தனம் செய்து உய்யும் பொருட்டுத் தாம் இயற்றியருளிய **நவமணி மாலை** என்னும் தமிழ் நூலில் அழகியதொரு சந்தவிருத்தப் பாவினை நமக்காகப் பாடி அளித்திருக்கின்றார்கள்.

### தெய்வநாயகன் :

அச் சந்த விருத்தம் பரம்பொருளின் முற்கூறிய பத்து விபவாவதாரங்களையும், **தெய்வநாயகன்** என்னும் ஓர் அர்ச்சாவதாரத்தையும் பற்றி அழகுற விளக்கிக் கூறுகின்றது. தெய்வநாயகன் என்னும் பெருமான் **திருவயிந்திரபுரம்** என்னும் தலத்தில் எழுந்தருளியிருக்கின்றான். திருவயிந்திரபுரம் என்னும் திவ்விய தேசம் தென்னாற்காடு மாவட்டத்தில் திருப்பாதிரிப்புலியூருக்கு மேற்கே 4 கல் தொலைவில் கெடில நதியின் கீழ்க்கரையில் அமைந்துள்ளது. கெடில நதி திருவயிந்திரபுரத்தில் தெற்கில் இருந்து வடக்கு நோக்கிப் பாய்கின்றது. ஆதலின், அது அங்கு **உத்திரவாகினி** என்று பெயர் பெறுகின்றது. இங்கு எழுந்தருளியுள்ள தெய்வநாயகனைப் பற்றி ஸ்ரீ தேசிகன் இயற்றிய சந்தவிருத்தப் பாவினை ஈண்டுக் காண்போம்.

### செய்யுளும் அதன் அமைப்பும் :

**மகர வடிவில் மறைகளுந்தி**
**யலைய வுற்றெ டுத்தனை**
**வடிவு கமட மெனவ மர்ந்து**
**மலைத னைத்த ரித்தனை**
**மலியு மசுர னுகவி ரைந்து**
**வசுதை பியத் தெடுத்தனை**
**வலிகொ ளவுண னுரமி டந்து**
**மதலை யைப்பு ரந்தனை**

பகர வுலக மடிய ளந்து
பகவ ருக்க ளித்தனை
பரசு முனிவன் வடிவு கொண்டு
பகைவ ரைத்து ணித்தனை
பணியு மிசைவி றசமு கன்றன்
முடிய றுத்து திர்த்தனை
படியு முருவு றுபிர லம்ப
வசுர னைத்த கர்த்தனை
நகரி னநிரை யிவைப ரிந்து
வரைக ரத்தெ டுத்தனை
நடமொ டியலு மரியில் வந்து
நலிவ றுக்க வொத்தனை
நலியும் வினைக ளறும ருந்தி
னலமு றுத்த கத்தினை
நணுகு கருட நதிகி ளர்ந்த
புனலு கப்பில் வைத்தனை
அகர முதல வுரைய ணங்கு
கணவ னுக்க ளித்தனை
அடையும் வினதை மகனு கந்த
வருள ளித்து யர்த்தினை
அடியு மணையு மெனும னந்த
னடிதொ ழுக்க ளித்தனை
அவனி மருவு திருவ யிந்தை
யடிய வர்க்கு நித்தனே

இது இருபத்தெண் சீர் ஆசிரியச் சந்த விருத்தம். நான்கு அடிகள். ஒவ்வொரு அடியிலும் நான்கு பகுதிகள். ஆகப் பதினறு பகுதிகள். அவை யாவும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளன. பாசுரத்தின் கடையெழுத்தைத் தவிர மற்றவை யெல்லாம் குறில்கள். (ஐகாரம் தன்னைக் குறிக்கும் பொழுது இரண்டு மாத்திரையுள தென்றும், அளபெடையில் இரண்டு முதலிய மாத்திரை யுளதென்றும், அளபெடையாகாது பாட்டில் முதலிடை கடைகளில் வரும் பொழுது ஒரு மாத்திரையுடைய குறில் என்றும் கவனிக்கப்பட வேண்டும்). ஒவ்வொரு பகுதியிலும் நான்காம் சீரின் இரண்டாம் எழுத்துக்கள் வல்லின மெல்லின மயக்கங்களாகவும், ஆருவது சீரின் இரண்டாம் எழுத்துக்கள் பல்வகை வல்லின மயக்கங்களாகவும் ஏழாவது சீரின் இரண்டாம் எழுத்துக்கள் ஒரே வகை வல்லின மயக்கங்களாகவும் அமைந்துள்ளது காண்க.

இனி இவ்வழகிய இனிய சந்தவிருத்தப் பாடலின் பொருளைச் சிறிது தொகுத்துக் காண்போம்.

## செய்யுட் பொருள் :

பூவுலகில் பாரத தேசத்தில் தென் பகுதியில் தமிழ்நாட்டில் (நடு நாட்டில்) கெடில நதிக் கரையில் அமைந்திருக்கும் திருவயிந்திரபுரம் எனும் திவ்ய தேசத்தில், தெய்வ நாயகன் என்றும், தாஸ ஸத்யன் (அடியவர்க்கு மெய்யன்) என்றும், திருநாமங்கள் கொண்டு அமர்ந்திருக்கும் அடியவர்களுக்கு நித்தியனுய் விளங்கும் பெருமானே. நீ அடியவர்களைக் காப்பாற்ற வேண்டுமென்ற நல்லெண்ணம் கொண்டல்லவோ பத்து விபவாவதாரங்களையும் தெய்வ நாயகன் எனும் இவ்வர்ச்சாவதாரத்தையும் செய்துள்ளனை.

### மச்சாவதாரம் :

கடலே இடங்கொள்ளாமல் அலையும் வண்ணம் பெரிய மீன் உருக்கொண்டு கடலில் நுழைந்து நான்கு மறைகளையும் மீட்டனை.

நைமித்திக பிரளய காலத்தில் ஜலமயமாயிருந்த உலகில், உலகங்களை மறுபடியும் படைக்க வெண்ணிப் படுத்துக் கிடந்த பரம்பொருளின் திருவாயிலிருந்து வெளிக் கிளம்பிய நான்மறைகளைப் பிரமன் பார்த்துக்கொண்டிருக்கும்பொழுதே அவரை ஏமாற்றிவிட்டு ஹயக்ரீவன் என்னும் அஸுரன் பலாத்காரமாய் அபகரித்துக்கொண்டு போய்க் கடல் நீரில் ஒளிந்துவிட்டான். அப்பொழுது பரம்பொருள் மீனுக அவதரித்துக் கடலுள் புகுந்து அவ்வஸுரனைக் கொன்று மறைகளை மீட்டு மறுபடியும் நான்முகனுக்கு உபதேசித்தான்.

### கூர்மாவதாரம் :

ஆமை வடிவம் கொண்டு திருப்பாற்கடலுக்கடியில் அமர்ந்து மந்தரமலை கடலில் அமிழ்ந்துவிடாமல் முதுகினுல் தாங்கினுய்,

பரமன் ஆணையால் தேவர்களும் அஸுரர்களும் மந்தர மலையை மத்தாகவும் வாஸுகியைக் கடைகயிருகவும் கொண்டு திருப்பாற் கடலைக் கடைந்தனர். அப்பொழுது மந்தர மலை கடலில் அமிழ்ந்து போகத் தொடங்கியது. தேவர்களும் அஸுரர்களும் மலையமிழ்ந்து போகாமல் தடுத்து நிறுத்த முயன்றனர். முடிய வில்லை. அப்பொழுது பரமன் ஆமை உருவம் எடுத்து முதுகினால் மலையைத் தாங்கிக்கொண் டிருந்தான்.

## வராகாவதாரம் :

**உலகை உபத்ரவித்துக் கொண்டிருந்த ஹிரண்யாக்ஷன் அழியும் வண்ணம் நீ வராஹாவதாரம் எடுத்து விரைந்து சென்று கோரைப் பல்லால் பூமிதேவியை எடுத்துக் கொண்டு வந்தாய்.**

திக்விஜயம் செய்து உலகத்தாரை ஒடுக்கிப் பூமிதேவியைப் பலாத்காரமாய் எடுத்துக் கொண்டுபோய்க் கடலில் ஒளித்து வைத்துத் திமிர் பிடித்தலைந்த ஹிரண்யாக்ஷனைப் பரமன் யஜ்ஞ வராஹாவதாரம் எடுத்து விரைந்து சென்று பூமிதேவியைக் கோரைப் பல்லால் மீட்டு வரும் பொழுது தன்னுடன் போர் புரிந்த அவனை அழித்தான்.

## நரசிம்மாவதாரம் :

**பலிஷ்டனான ஹிரண்ய கசிபு வெனும் அசுரன் மார்பைப் பிளந்து அவன் பிள்ளையாகிய ப்ரஹ்லாதனைக் காப்பாற்றினாய்.**

தன் தம்பியாகிய ஹிரண்யாக்ஷன் வராஹப் பெருமானால் கொல்லப்பட்டதை யறிந்த ஹிரண்ய கசிபு கடும் தபஸ் செய்து, வீட்டின் அகத்தும், புறத்தும், இரவிலும் பகலிலும் மனிதனாலும், மிருகத்தாலும், ஆயுதத்தாலும் தனக்குச் சாவு கூடா தென்று ப்ரஹ்மாவினிடமிருந்து வரம் பெற்று மூவுலகையும் அடக்கித் தானே கடவுள் என்று கூறிக்கொண்டிருந்த காலத்தில் அவனுடைய பிள்ளையாகிய ப்ரஹ்லாதன் நாராயணனே முழுமுதற் கடவுள் என்ன, அவன் எங்குளன்? என்று ஹிரண்ய கசிபு கேட்க, தூணிலும் உளன், துரும்பிலும் உளன் என்று ப்ரஹ்லாதன் கூற, ஒரு தூணைக் காட்டி இதில் உளனோ என்று ஹிரண்ய கசிபு கேட்க, உளன் என்று ப்ரஹ்லாதன் கூற, ஹிரண்ய கசிபு அத்தூணைக் கையால் அறைய, பகலும் இரவுமல்லாத ஸாயங்காலத்தில் அகமும் புறமுமில்லாத வாயிற்படியில், மனிதனும் மிருகமுமல்லாத நரசிங்கமாய்த் தோன்றி ஆயுதமின்றிக் கை நகங்களால் ஹிரண்ய கசிபுவின் மார்பைக் கிழித்துக் கொன்று அவன் பிள்ளையாகிய ப்ரஹ்லாதனைப் பரமன் காப்பாற்றினான்.

## வாமனாவதாரம் :

**மூவடி மண் கொடுத்தேன் என்று கூறிய வுடனே விச்வரூபமெடுத்து உலகம் முழுவதையும் அளந்து உன்னதாக்கிக் கொண்டு, பிறகு அவ்வுலகை உன் அடியார்களாகிய இந்திரன் முதலியோருக்குக் கொடுத்தாய்.**

ப்ரஹ்லாதன் பேரனாகிய மகாபலி யென்பவன் இந்திரன் முதலியவர்களை வென்று உலகத்தைத் தனதாக்கிக் கொண்டான். இந்திரன் பரமனை உலகை மீட்டுத் தரவேண்டுமென வேண்டப் பரமன் வாமன உருவொடு மகாபலியின் யாகசாலைக்குச் செல்ல, வேண்டியவர் வேண்டியதைக் கொடுத்துவந்த மகாபலி என்ன வேண்டுமென்று வாமனனைக் கேட்க, வாமனன், அருளுண்டேல் மூவடி மண் வேண்டுமென வேண்ட, வெள்ளி தடுத்தும், மஹாபலி தாரை வார்த்து மூவடி மண் கொடுத்தேன் என, வாமனன் தன் கையில் நீர்த்தாரை விழுந்ததும் பேருருவம் கொண்டு ஆகாசத்தையும் பூமியையும் ஈரடிகளால் அளந்து மூன்றாவதடிக்கு இடமில்லாமையால் மஹாபலியின் வேண்டுகோளுக்கு இணங்க அவன் தலையை வைத்துப் பாதாளத்தில் அழுத்தி அவனையும் உய்யச் செய்து இந்திரனுக்கும் அரசை மீட்டுக் கொடுத்தான்.

## பரசுராமாவதாரம் :

**பரசுராமன் எனும் பார்ப்பன முனியாக அவதரித்துக் கொடிய பகைவர்களைக் கோடரியால் வெட்டி அழித்தாய்.**

கார்த்தவீர்யன் என்னும் க்ஷத்ரிய மன்னன் ஜமதக்னியின் ஆச்ரமத்துக்கு சென்றபொழுது, அவர் தன் காமதேனுவின் உதவியால் அவ்வரசனுக்கு விருந்து செய்து உபசரித்தார். அவ்வர

சன் அப்பசுவின் பெருமையைவியந்து அதைப் பலாத்காரமாய்த் தன் நகரத்திற்கு ஓட்டிக் கொண்டு போய்விட்டான். அப்பொழுது வெளியில் சென்றிருந்த ஜமதக்னியின் பிள்ளையான பரசுராமன் விஷயத்தையறிந்து கார்த்தவீர்யன் நகரமாகிய மாஹிஷ்மதிக்குச் சென்று பசுவைக் கேட்டார். அவன் கொடுக்காததோடு, பரசு ராமனோடு போரிட்டு மாண்டான். பரசுராமன் பசுவை ஓட்டி வந்துவிட்டார். அரசனைக் கொன்றது பாபமென்றும் அதற்குப் பரிஹாரமாகத் தீர்த்த யாத்ரை செய்ய வேண்டுமென்றும் ஜமதக்னியால் கட்டளையிடப்பட்ட பரசுராமன் தீர்த்த யாத்திரை செய்து திரும்பினார். அச்சமயம் கார்த்த வீர்யன் பிள்ளைகள் பழிக்குப் பழி வாங்க நினைத்து (மற்றும் பல க்ஷத்ரிய மன்னர்களின் உதவி பெற்று) ஜமதக்னியின் ஆசிரமத்திற்கு வந்து அவரைக் கொன்றுவிட்டனர். அதையறிந்த பரசுராமன் இருபத்தோரு தலைமுறை துஷ்ட க்ஷத்ரியர்களைக் கொன்று ஸமந்த பஞ்சக மென்னுமிடத்தில் ஐந்து பெரிய ரத்தக் குளங்களைத் தேக்கித் தன் பித்ருக்களுக்குத் தர்ப்பணம் செய்தார்.

## இராமாவதாரம் :

பணிந்து போவதற்குச் சம்மதியாத இராவணனுடைய தலைகளை யறுத்துப் பூமியில் (பனம்பழம் போல்) சிதறி விழச் செய்தார்.

பஞ்சவடியில் மாயை மானென்றேவி, ராம லக்ஷ்மணர்களைப் பிரித்துவிட்டு, ஆச்ரமத்தில் தனியாகவிருந்த சீதாபிராட்டியை அபகரித்து இலங்கையில் சிறை வைத்த இராவணனைக் கருணையின்றிக் கொன்று தீர்க்கவேண்டிய இராமன், அவ்வாறு செய்யாததோடு 'சீதையைத் திரும்பவும் கொடுத்துவிட்டால் விட்டு விடுகிறேன் என்று சொல்லியும்கேளாமல் போர் செய்த துஷ்ட இராவணன் போரில் களைத்துப் போன போது, 'இன்று போய் நாளை வா' என்று கூறியும், மதிகெட்டுப், பணிந்துபோக மனமின்றிப் போரிட, அவன் தலைகள் பத்தையும் பனங்காய்கள் போல் வாளியால் அறுத்துத் தள்ளினான்.

## பலராமாவதாரம் :

இடைச் சிறுவர்கள் போல் பொருத்தமான உருவம் எடுத்துவந்த ப்ரலம்பாசுரனை அழித்தாய்.

ப்ருந்தாவனத்தில் க்ருஷ்ணனும் பலராமனும் இடைச் சிறுவர்களுடன் காட்டிற்குச் சென்று இரண்டு பிரிவுகளாகப் பிரிந்து விளையாடினார்கள். (தோற்றவர்கள் ஜயித்தவர்களை முதுகில் தூக்கிக்கொண்டு போய்க் குறிப்பிட்ட இடத்தில் விடவேண்டும்.) கம்ஸனால் ஏவப் பட்ட பிரலம்பன் என்னும் அஸுரன் தானும் ஓரிடைச் சிறுவன் வேஷத்துடன் அங்கு வந்து அவர்களோடு விளையாடினான். ப்ரலம்பன் க்ருஷ்ணன் பக்கம் இருந்தான். க்ருஷ்ணன் கட்சி தோற்றுவிட்டது. அப்பிரிவிலுள்ளவர் பலராமன் முதலியவர்களை முதுகில் சுமக்க வேணடியதாயிற்று. ப்ரலம்பன் பலராமனை முதுகில் சுமந்துகொண்டு இறக்கிவிட வேண்டிய இடத்தைத் தாண்டிச் சென்று பேருருவுடன் ஆகாசத்தில் கிளம்பினான். அஸுரனின் எண்ணத்தை யறிந்த பலராமன் அவனைத் தன் முஷ்டியினால் தலையில் குட்டிக் கொன்றான்.

## கிருஷ்ணாவதாரம் :

ப்ருந்தாவன ஜனங்கள் மாட்டு மந்தைகள் முதலியவை கல்மழையில் அழியா வண்ணம் அன்பு கூர்ந்து கோவர்த்தன மலையைக் கையால் எடுத்துக் குடையாய்ப் பிடித்துக் காப்பாற்றினாய்.

இடையர்கள் இந்திரனுக்குச் செய்யவிருந்த விழாவைத் தடுத்துக் கோவர்த்தன மலைக்கு அவ்விழாவைச் செய்யச் சொன்னான் க்ருஷ்ணன். அவர்களும் அவ்வாறே செய்தார்கள். இந்திரன் கோபித்து ஆயர்பாடியில் கல் மழை பொழிவித்தான். மனிதர்களோடு மாடுகள் முதலியவும் அழியத் தொடங்கின. இடையர்கள் கண்ணனிடம் முறையிட்டனர். உடனே கண்ணன் ஊருக்கருகிலிருந்த கோவர்த்தன மலையை வேருடன் பிடுங்கித் தலைகீழாகக் குடையாகப் பிடித்தான். ப்ருந்தாவன ஜனங்கள் மாடுகள் முதலியவை காப்பாற்றப்பட்டன. தலைகீழாகப் பிடித்ததால் மலையிலிருந்த முனிவர், வன மிருகங்கள், பக்ஷிகள் முதலியவைகளும் காப்பாற்றப்பட்டன. இந்திரன் கொழுப்படங்கிக் கண்ணனை வணங்கிச் சென்றான்.

## கல்கி அவதாரம்:

கல்கியாய் அவதரித்துப் பொருத்தமான குதிரையில் ஏறி வாளேந்திச் சிரமமின்றித் துஷ்டர்களை யழித்துக் கலி தோஷங்களைப் போக்க எண்ணியுள்ளாய்.

கலியுக முடிவில் பரமன் வடநாட்டில் சம்பளம் என்னும் இடத்தில் விஷ்ணு யசஸ் என்பவருக்குக் கல்கி யெனும் பிள்ளையாய்ப் பிறந்து வாளேந்திய கையுடன் குதிரையேறித் துஷ்டர்களை யழித்து மறுபடியும் க்ருதயுக தர்மங்களை உலகத்தில் செழிக்கச் செய்ய வெண்ணியுள்ளான்.

## திருவயிந்தையில் தெய்வநாயகன் :

சேதனர்களை வருத்தும் நல்வினை தீவினைகள் அழியக் காரணமாகிய மருந்து போன்ற ஔஷதகிரி யெனும் மலையடிவாரத்தில் பாய்கின்ற கருட நதியின் இனிய நீரை உகந்து அங்கு அர்ச்சாரூபமாய்க் கோயில் கொண்டாய். (நல்வினை இனிய பயனைக் கொடுத்துப் பந்தகமாகின்றது. பொன் விலங்கு போன்றது. தீவினை துன்பத்தைக் கொடுத்துப் பந்தகமாகின்றது. இரும்பு விலங்கு போன்றது.)

## பிரம்ம தீர்த்தம் :

வாக்தேவி (ஸரஸ்வதி)யின் கணவனாகிய நான்முகனுக்கு அகரத்தை முதலாக உடைய நான்கு வேதங்களையும் உபதேசித்து, அந் நான்முகன், தான் படைத்த பிரம்ம தீர்த்தம் என்னும் புண்ய தீர்த்தத்தின் கரையில் தெய்வநாயகனாகிய உன்னைக் குறித்துத் தவம் புரிய உவந்து அவன் வேண்டிய வரம் தந்தருளினாய்.

## கருட தீர்த்தம்:

உன்னைச் சரணமாயடைந்த கருடாழ்வானுக்கு அவன் விரும்பிய வரமளித்து மேன்மையுறச் செய்தாய்.

தெய்வநாயகன் தண்ணீர் விடாயினால் வருந்தக் கருடாழ்வான் தன் மூக்கினால் கீறிக் கடில நதியில் தண்ணீர் கொண்டுவந்து உபசரித்தான். அதுமுதல் கடிலம் கருட நதியாயிற்று.

## சேஷ தீர்த்தம் :

சென்றாற்குடையாம் இருந்தாற் சிங்காதனமாம் என்ற முறையில் பாதுகையாகவும் பாயாகவும் இன்னும் பலவகையாகவும் தொண்டு செய்தும், தண்ணீர் விடாய் வந்த பொழுது சேஷ தீர்த்தம் என்ற கிணற்றை உற்பத்தி செய்து விடாய் தீர்த்தும் உதவிய ஆதிசேஷன் விஷயத்தில் அருள் மிகச் சுரந்தாய்.

## பூமி தீர்த்தம் :

பதினாறாவது பகுதியின் பொருள் தொடக்கத்திலேயே கூறப்பட்டது. அதில் 'அவனி மருவு' என்ற பகுதியால் பூமி தீர்த்தம் நினைவூட்டப் படுகிறது.

இவ்வாறு இவ்வழகிய சந்த விருத்தத்தை எப்பொழுதும் அனுஸந்தானம் செய்வதால் அர்ச்சாவதாரம் விபவாவதாரங்கள் இரண்டையும் அனுஸந்தானம் செய்ததாகிறது. இம்மை மறுமைப் பயன்கள் கிடைக்கும். ★

---

**சிவகிரி :** ஸ்ரீ கனககிரி வேலாயுதசாமி தேவஸ்தானத்தில் பிரம்மோற்சவம்
**காரைக்குடி :** ஸ்ரீ கொப்புடைய நாயகி அம்மன் கோயிலில் செவ்வாய் உற்சவம்
**திருப்பரங்குன்றம் :** ஸ்ரீ தேவ சேனா சமேத ஸ்ரீ சுப்பிரமண்ய சுவாமி கோயிலில் மகா கும்பாபிஷேகம் (22-5-63)
**பொன்னிவாடி :** ஸ்ரீ பகவான் தேவஸ்தானத்தில் அக்னிநட்சத்திரத் திருவிழா
**வட திருமுல்லைவாயில் :** ஸ்ரீ மாசிலாமணி ஈசுவரர் கோயிலில் பிரம்மோற்சவம்
**வாளமர்கோட்டை :** ஸ்ரீ சவுந்தரநாயகி அம்பாள் சமேத ஸ்ரீ சுந்தரேஸ்வரர் கோயிலில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம்
**நாகப்பட்டினம் :** ஸ்ரீ காயரோகண சுவாமி கோயில் பிரம்மோற்சவம்
**திருவையாறு :** ஸ்ரீ பஞ்சநதீசுவர சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்
**கீழையூர் :** ஸ்ரீ ரங்கநாதப் பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம்
**தேவக்கோட்டை :** ஸ்ரீ ரங்கநாதப் பெருமாள் கோயிலில் பிரம்மோற்சவம்
**திருவிடந்தை :** ஸ்ரீ நித்ய கல்யாண சுவாமி கோயிலில் பிரம்மோற்சவம்
**திருஇடையாறு :** ஸ்ரீ மருந்தீஸ்வரர் கோயிலில் அஷ்டபந்தன மகா கும்பாபிஷேகம் (6-6-63).

# தஞ்சை இராசராசேச் சரத்துக்கு அளிக்கப்பெற்ற நிலநிவந்தம்

வித்துவான். திரு.வை. சுந்தரேச வாண்டையார், அண்ணாமலைப் பல்கலைக் கழகம்.

முதலாம் இராசராச சோழன் தஞ்சை இராச ராசேச்சரருடைய பரம சுவாமிக்கு வேண்டும் நிவந்தங்களுக்கு ஆண்டு தோறும் சற்றேறக்குறைய ஒன்றரை லட்சம் கல நெல் வருவாய் உள்ள நிலங்களைத் தேவதானமாகச் சோழ மண்டலத்திலும், புற மண்டலங்களிலும் கொடுத்துள்ளான்.

**நிலம் கொடுக்கப் பெற்ற இடங்கள் :—**

(1) தென் கடுவாயான அருமொழி தேவ வள நாட்டு இங்கணாட்டுப் பாலையூர், ஆரப்பாழ், கீரன்தேவன்குடி, நாகன்..... (இவ்வூரின் பெயரில் சில எழுத்துக்கள் சிதைந்து விட்டன), தண்ணீர்க்குன்றமான ராஜ ராஜ நல்லூர், உச்சிபாடி, கீழ்வடுகக்குடி, கஞ்சாறநகர், ஊசிக் கண்ணங்குடி; ஆர்வலக் கூற்றத்து வடவிறையான் பள்ளம், திருத்தெங்கூர்;

(2) வடகடுவாயான க்ஷத்திரிய சிகாமணி வளநாட்டுத் திருநறையூர் நாட்டு அரக்கன்குடி, பிடாரசேரி, வேளா நாட்டு மணற்காலப் பள்ளி;

(3) அரிசிலுக்கும் காவிரிக்கும் நடுவான உய்யக்கொண்டார் வளநாட்டுத் திரைமூர் நாட்டு நெற்குப்பை,

(4) வடகரை இராசேந்திர சிங்க வளநாட்டு இன்னம்பர் நாட்டு மருத்துவக் குடி, கருப்பூர், திருவாலி நாட்டுத் திருத் தேவன்குடி, குறுங்காணியக்குடி;

(5) மழ நாடான ராஜாஸ்ரய வளநாட்டுப் பாச்சிற் கூற்றத்து மீய்ப லாற்று அன்பனூர், பாச்சிற் கூற்றத்து கீழ்பலாற்று ஈங்கையூர், பணமங்கலவன் கரைப்பற்றுச் சாத்தன்குடி; கலார்க் கூற்றத்து மாந்தோட்டம், இறையான் சேரி, வெண்கோன் குடிக் கண்டத்து வெண்கோன்குடி, மாகாணிகுடி, செம்புறைக் கண்டத்துச் சிறுசெம்புறை, துறையூர்;

(6) நித்தவிநோத வள நாட்டு வெண்ணிக் கூற்றத்து நகரம் வெண்ணி, பூதமங்கலம், மீதுவேலி, நகரக்காரக் குறிச்சி, வடதாமரை, வெண்ணித் திறப்பான்பள்ளி;

(7) அருமொழி தேவ வளநாட்டுத் தக்களூர் நாட்டு நகரம் வேநெல்விடுகு பல்லவபுரம், கொடி மங்கலம் என்னும் ஊர்களாகும்.

மேற் குறித்த ஊர்களில் வெண்ணி, பூ:தமங்கலம், பூதமங்கலத்துப்பால்மீது வேலி, நகரக் காரக்குறிச்சி, வட தாமரை, வெண்ணித்திறப்பான்பள்ளி, இவ்வூர்களிலுள்ள நிலங்களுக்கு இவ்வூரார் ஐந்நூற்று நாற்பத் தொரு கழஞ்சே மஞ்சாடியும் எட்டுமா பொன்னையும், தக்களூர் நாட்டு வேநெல்விடுகு பல்லவபுரத்து நகரத்தார் நூற்றறுபத்தேழு கழஞ்சரையே மூன்று மஞ்சாடியும் இரு மா வரை பொன்னையும்; ஆர்வலக் கூற்றத்துத்

திருத்தெங்கூர் நகரத்தார் இருநூற்றுத் தொண்ணூற்று ஏழு கழஞ்சே நாலு மஞ்சாடியும் மூன்று மா முக்காணி பொன்னையும், திருவாலி நாட்டுக் குறுவாணியக்குடி ஊரார் முந்நூற்று நாற் கழஞ்சே மூன்று மஞ்சாடியும் ஒன்பது மா வரை பொன்னையும் காணிக் கடனாகக் கொடுத்தனர்.

ஏனைய ஊரார்கள் மேற் குறித்த சற்றேறக்குறைய ஒன்றரை லட்சம் கல நெல்லை இராசகேசரியோ டொக்கும் ஆடவல்லான் என்னும் மரக்காலால் அளந்து வந்தனர். மேற் குறித்த ஊர்களில் ஒவ்வொரு ஊரில் உள்ள மொத்த நிலம், அவைகளில் இன்ன காரணத்திற்காக இறையிலியாக நீக்கப்பட்ட நிலம் இவ்வளவு, எஞ்சிய நிலம் இவ்வளவு என இந்த நிவந்தத்தை உணர்த்தும் கல்வெட்டுக்களில் குறிக்கப் பெற்ற செய்திகள் நம்மை மகிழ்ச்சிக் கடலில் செலுத்துவனவாகும்.

உதாரணமாக,

"இந்நாட்டு ஆரப்பாழ் நாய் வாலமும், மருத்துவப் பேறும், பள்ளியும் உள்பட அளந்தபடி நிலம் நூற்று ஒரு பத்து ஒன்றே அறுமா அரைக்காணிக் கீழ் முக்காலே அரைக்காலின் கீழ் அரையே இரண்டு மாவிலும், ஊர் நத்தமும் குளங்களும், ஸ்ரீ கோயிலும், ஐயன் கோயிலும் பிடாரிகோயிலும் கழனிக் குளங்களும் பறைச்சேரி நத்தமும் இறையிலி நிலம் மூன்றரையே நான்கு மாக் காணி அரைக் காணி நீக்கி, இறை கட்டின நிலம் நூற்று ஏழரையே இரண்டு மாக் காணிக் கீழ் முக்காலே அரைக் காலின் கீழ் அரையே இரண்டு மாவினால், இறை கட்டின காணிக் கடன் ராஜ கேஸரியோடொக்கும். ஆடவல்லான் என்னும் மரக்காலால், அளக்கக் கடவ நெல்லுப் பதினாயிரத்து எழு நூற்று நாற்பத்தைங் கலனே இரு தூணிப் பதக்கு முந்நாழி என்னும் கல்வெட்டுப் பகுதி முதலியன இவைகளுக்குச் சான்றாகும்.

இந்நில நிவந்தத்தை உணர்த்தும் கல்வெட்டுக்களினால் அறியப்படும் அக்கால வழக்குகள் :—

ஸ்ரீ கோயில், பிடாரிகோயில், ஐயன் கோயில், சேட்டையார் கோயில், காடுகாள் கோயில், ஊர் இருக்கை, ஊர் நத்தம், கம்மாணச்சேரி, தளிச்சேரி, வண்ணாரச்சேரி, பறைச்சேரி, தீண்டாச் சேரி, உழப்பறையர் இருக்கும் சேரி, குளம், குளக்கரை, திருமஞ்சனக்குளம், புலத்தில் குளம், கழனிக்குளம், செங்கழு நீர் நட்ட குளம், ஊருணி குளம், அதன் கரை, பறைக்குளக்குழி, கிணறு, அதன் தொட்டி, வெள்ளான் சுடுகாடு, பறைச் சுடுகாடு, சுடுகாட்டுக்குப் போம் வழிகள் ; நாய் வாலம், மருத்துவப்பேறு, கணிமுற்றூட்டு, சாலாபோகம், பள்ளிச்சந்தம் பள்ளி, பெண் பள்ளி, திறப்பான மகாதேவர் தேவதானங்கள், திருவடிகள் தேவதானங்கள், பள்ளிச் சந்தம் இறங்கின ஊர்கள், நந்தவனங்கள், பெரு வழிகள், களமாய்க் கிடந்த நிலங்கள், கன்றுமேய் பாழாகக் கிடந்த நிலங்கள், கொட்டகாரம், ஆறுகள், குறங்கறுத்துப் புறவூர்க்கு நீர் பாய்ந்த வாய்க்கால்கள், ஊடறுத்துப் போன வாய்க்கால்கள், இவைகள் முதலானவைகள் இறையிலி நிலங்களாக எண்ணப்பட்டு வந்தன.

இவைகளுள் சேட்டையார் கோயில் என்பது மூதேவி (இலக்குமிக்கு மூத்தவள்) எழுந்தருளியிருக்கும் கோயில். காடுகாள் என்பது துர்க்கா தேவி. வைரவருடைய தாயார் கோயில் என்பர் கல்வெட்டுத் துறையாளர். கம்மாணச் சேரி -

இது கம்மாளர்கள் வசித்து வந்த இடம். சேரி என்பது சேர்ந்தது என்ற பொருளில் இருக்கின்றது. தீண்டாச் சேரி - தாழ்ந்த சாதியார் செல்லக் கூடாத அந்தணர்கள் வசிக்கும் இடம். உழப்பறையர்-என்பவர் உழுது பயிர் செய்யும் பறையர். மருத்துவப்பேறு—ஊரில் மருத்துவர்க்கு இறையிலியாக விடப்பட்ட நிலம். பள்ளிச் சந்தம் - சைன பௌத்த கோயில்களுக்கு விடப்பட்ட நிலம். சாலா போகம் - அறச் சாலைக்காக விடப்பட்ட நிலம். பெருவழிகள் (Roads), ஊருணி - ஊரார் உண்ணும் நீர் நிலை.

குறங்கறுத்துப் புறவூர்க்கு நீர்பாய்ந்த வாய்க்கால் - வாய்க்காலிலிருந்து வேறு தனியாகப் பிரிந்த வாய்க்கால். பெண் பள்ளி - சைன சமயப் பெண் துறவிகள் இருக்கும் இடம். நாய் வாலம் - என்பது இன்னதென்று இக்காலம் புலப்படவில்லை.

இந்நில நிவந்தத்தை உணர்ந்தும் கல்வெட்டினால் முதலாம் இராசராசன் காலத்தில் இருந்த வாய்க்காலின் பெயர்களுள் சில.

**பெருவளவாய்**—இது மழ நாடான ராஜாஸைர்ய வளநாட்டுப் பாச்சில் கூற்றத்து மீய்பலாற்று அன்பனூரில் குறிக்கப் பெற்றுள்ளது. இது திருச்சிராப் பள்ளி ஜில்லாவில் கொள்ளிடத்தின் வடபால் ஓடுகின்றது. மழ நாட்டுக்குப் பாயும் வாய்க்காலில் இது பெரியது ஆகும்.

**பைங்கேணி வாய்க்கால்**—இது ஷை கூற்றத்துக்குக் கீழ்பலாற்றுப் பணமங்கலவன் வகைப்பற்று சாத்தன்பாடி ஊரில் குறிக்கப் பெற்றுள்ளது. திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் பாய்வது

**பாண்டவயாறு**—இது விண்ணாற்றிலிருந்து பிரிந்து செல்வது. தஞ்சாவூர் ஜில்லாவில் ஓடுவது.

**நாட்டார் வாய்க்கால்**—இது வெண்கோன்குடிக் கண்டத்தில் உள்ளது. இது திருச்சிராப்பள்ளி ஜில்லாவில் பாய்வது.

**அறியப்படும் பிடாரியாரின் கோயில்கள் :**

பாச்சில் கூற்றத்துக்குக் கீழ் பலாற்றுத் துறையூரில் பிடாரி புன்னைத்துறை நங்கை கோயிலும், பிடாரி பொதுவகை ஊருடையாள் கோயிலும், குதிரை வட்டமுடையாள் கோயிலும் இருக்கின்றன. இவைகளில் பிடாரியாரின் திருப் பெயர்கள் கண்டு மகிழ்தற்குரியன.

**வேறு கோயில்கள் :**

ஐயன் கோயில் (ஐயனார் கோயில்), காடுகாள் கோயில், சேட்டையார் கோயில், புகழீஸ்வரம் முதலான கோயில்களைக் காணலாம்.

---

# சிவஞான போதம்

[திரு. க. வச்சிரவேல் முதலியார், B.A., L.T.
காஞ்சிபுரம்.

## ஏழாஞ்சூத்திரம் மூன்றும் அதிகரணம் :

1. சூத்திரக்கூறு : "இருதிறன் அறிவுள(து) இரண்டலா ஆன்மா."

2. வார்த்திகம் : இனி, இருதிறன் அறிவுளது இரண்டலா ஆன்மா என்றது : இவ்விரண்டினையும் அறிவதாய், உபதேசியாய், நின்ற அவ்வறிவு இரண்டன்பாலும் உளதாய் உள்ள அதுவே அவ்வான்மாவாம் என்றது.

[இவ்வதிக்கரணத்தால் ஆன்மாவின் தன்னியல்பு (சொரூபலக்கணம்) உணர்த்தப்படுகிறது. இருதிறன் என்றது இரண்டுவகை எனப் பொருள்படும் ; அவையாவன அசத்து, சிவசத்து என முன் வரையறை செய்யப்பட்டவை. இருதிறன் அறிவுளது என்னும் மூலம் இருதிறனையும் அறியும் அறிவுளது, இரு திறனாலும் அறியும் அறிவுளது, இரு திறனின்பாலும் உள்ள அறிவுளது என மூன்று வேற்றுமைப் பொருள்பட விரித்துரைக்கப்படும் என்பது ஆசிரியர் கருத்து. பிறப்பு நிலையில் அசத்தால் விளங்கி, அசத்தை அறிந்து அசத்தின்பால் உள்ளதாய் நிற்றலும், வீட்டு நிலையில் சிவசத்தால் விளங்கிச் சிவசத்தை அறிந்து சிவசத்தின்பால் உள்ளதாய் நிற்றலும் ஆன்மாவின் தன்னியல்பு என்றபடி. எனவே, அஃது அசத்தெனவும் படாது சத்தெனவும்படாது, அசத்தைச் சத்துடனின்று நீங்குந் தன்மையால், சதசத்து (சத்தும் அசத்தும்) ஆம் என்பது கருத்து.]

உபதேசியாய் - அறிவிக்க அறிவதாய்.

3. (அ) இங்குத் தன்னாற் கூறப்படும் பொருள் :

அசத்து எனப்பட்ட உலகப் பொருள்களையும் சிவசத்து எனப்பட்ட முதற்பொருளையும் அறிந்து நுகர்வது அவற்றின் வேறாய்ச் சதசத்து எனத்தக்க ஆன்மாவேயாம் ; அஃது அசத்தை அறிந்து நுகரும்போது மாயா காரியமாய் அசத்தெனப்படும் கரணங்களால் அறிவு விளங்கப் பெற்று, அவற்றின் வேறு காணப்படுமாறின்றி அசத்தே எனும்படி சார்ந்து நிற்கும், சிவசத்தைத் தலைப்பட்டு உணரும்போது தத்துவங்களின் நீங்கி, சிவசத்தின் சொரூபமாகவும் குணமாகவும் உள்ள அருளொளியால் தன் அறிவு வியாபகமாக விரிந்து விளங்கப்பெறும் ; அன்றியும் அந்நிலையில் சிவத்தைச் சார்ந்து வேறு காணப்படுதலின்றிச் சிவமேயாகத் திகழும்.

(ஆ) ஆன்மாவின் இயல்பைப் பல்வேறு சமயத்தவர் பல்வேறு வகையாகக் கருதுவர். மேலே கூறியவற்றால் அவையெலாம் மறுக்கப் படுகின்றன ; அவற்றை முறையே சிந்திப்போம் :—

(i) ஆன்மாவாவது ஒரு மரத்தின் கிளை போலச் சிவசத்தின் அகப்பேதமேயன்றிப் புறப்பேதமன்று ; ஆதலால், உலகத்தை உயிர்களின் பொருட்டு முதற் பொருளே நுகரும் என்பர் சிவாத்துவித சைவர். இவர் முதல் அதிகரணத்தில் மறுக்கப்பட்டனர்.

இனி, சங்கிராந்தவாத சைவர் ஆன்மாவின்முன் கரணங்கள் எனப்படும் தத்துவங்கள் உணர்வு உடையனவாம். ஆகலின், அவையே சிவசத்தை நுகர்வன என்பர். இவர் இரண்டாம் அதிகரணத்தால் மறுக்கப்பட்டனர்.

மறுக்கப்பட்டமையின் அசத்தும் சிவசத்தும் தம்முள் ஒன்றனையொன்று அறியா எனின், இவற்றை அறியும் பொருள் வேறு யாது என அவ்விருவர் மதம் பற்றி வினா எழும். இவ்விருதிறனையும் அறியும் அறிவுளது ஆன்மா என்றமையின் அவ்வினாவிற்கு விடை கூறியதாயிற்று.

"சிவசத்தும் அசத்தும் அல்லாத ஆன்மாவே அவ்விரு திறனையும் அறிவது; அவை தம்முள் ஒன்றுன் ஒன்று அறியப்படாமையான் ஆன்மாவாலும் அறியப்படா எனின் பயன்படுதலின்றிப் பாழாய் முடியுமாகலின்; தம்முள் ஒன்றுன் ஒன்று அறியப்படாத ஞாயிற்றினையும் உலகப் பொருள்களையும் கண்டுவரும் கண் போல"—எனக் கருதலளவை பற்றி உணரப்படும் என்பது கருத்து.

இதனால், ஆன்மாவின் அறியுந் தன்மை, இருள்ஒளி என்பவற்றைச் சார்ந்து அது அதுதானாக நின்றுகாணும் கண்ணின் தன்மை போல, வேறுயதோர் தன்மை என்பதும் உணரப்படும். இக் கருத்தைப் பின்வருமாறு உணர்த்துகின்றார் ஆசிரியர்:—

நுண்ணிய நூல் பல உலகில் உள்ளன; அவற்றை ஆய்ந்து உணர்வது ஆன்மாவே ஆகலின், ஆன்மாவிற்கு அறியுந் தன்மை உண்டென்பது தெளியப்படும். அவ்வான்மாச் சுட்டறிவால் உணரப்படாத அருவாகிய முதற்பொருளையும், அதனால் உணரப்படும் உருவாகிய காரியப்பிரபஞ்சத்தையும் அறிவதாகலின், அஃது அவற்றின் வேறுயதோர் பொருளேயாம்.

இனி, அதன் உண்மை எவ்வாறு அறியப்படும் எனின், அஃது அசத்துச் சிவசத்து என்றவை போலத் தனித்து அறியப்பட்டு அவற்றோடு ஒப்ப உடன்வைத்து, எண்ணப்படமாட்டாது. மலரின்கண் உள்ள மணம் மலரை அறியுமுகத்தான் அதன்கண் அடங்கியுள்ளதாய் அறியப்படுதல் போல, ஆன்மாவின் உண்மை அசத்தையும் சிவசத்தையும் சார்ந்து அவற்றை அறிந்து நிற்கையில். அங்ஙனம் அறியும் அறிவொன்று உண்டு எனத் தற்சோதனை உள் நோக்கு (Introspection)ப் பற்றி உணரப்படும்.

**அருவுருவம் தானறிதல்**
**ஆய்இழைஆய் ஆன்மா**
**அருவுருவம் அன்றாகும்;**
**உண்மை—அருவுருவாய்த்**
**தோன்றியுடன் நில்லாது;**
**தோன்றாது நில்லாது;**
**தோன்றல் மலர்மணம்**
**போல் தொக்கு.**

(தொடரும்)

## வைணவ ஆசார்யர் திருநாட்கள்

—

வைகாசி—ஜூன்

| | | | |
|---|---|---|---|
| 9 | — | 2 | நைநாராச்சார்; குமார வேதாந்தாசார் |
| 21 | — | 4 | அழகிய சிங்கர்; திருமலை நம்பி |
| 22 | — | 5 | திருவாய்மொழிப் பிள்ளை; பிள்ளைத் திருநம்பி |
| 23 | — | 6 | பெரிய பட்டர்; கோயில் கந்தாடை அண்ணன்; ஸ்ரீராமப் பிள்ளை |
| 24 | — | 7 | ஸ்ரீ திருவரங்கப் பெருமாள் அரையர் |
| ஆனி | | | |
| 11 | — | 25 | மாறனேரி நம்பி |
| | | ஜூலை | |
| 16 | — | 1 | ஸ்ரீ எங்கள் ஆழ்வார் |
| 18 | — | 3 | ஸ்ரீ நாத முனிகள் |

❋

## சைவ நாயன்மார் திருநாட்கள்

—

வைகாசி—ஜூன்

| | | | |
|---|---|---|---|
| 25 | — | 8 | திருஞான சம்பந்தர், முருகர், திரு நீல நக்கர், திரு நீலகண்டயாழ்ப்பாணர் |
| 12 | — | 26 | மாணிக்கவாசர் |
| 13 | — | 27 | அமர்நீதியார் |

❋

திருவாடானை ஸ்ரீ ஆதி ரத்தினேசுவரர் கோயிலில், யாத்ரீகர் விடுதிக்கும், கோயிற் பரிசாரகர்கள் விடுதிக்கும், அறநிலைய அமைச்சர் திரு. M. பக்தவத்சலம், B.A., B.L. அவர்கள், அடிப்படைக்கல் நிறுவுதல்.



காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் கோயில் ஸ்ரீ உற்சவமும் ஆண்டாளும்.

காஞ்சிபுரம் வரதராஜப் பெருமாள் கோயில் கோபுரம், நூறுகால் மண்டபம், திருக்குளம்.

Edited and Published by the Commissioner, Hindu Religious and Charitable Endowments (Administration) Department, Madras-34. Printed at The United Printers, Madras-1.